Regd. No. 3398. Estd. 1935. THE SHIVAJI TAMIL WEEKLY

# சிவாஜி

பக்கங்கள் 12 14-5-50 விலை அணு 1




## நீதிச் சிக்கல்

நீதியை ஒழுங்காக நிர்வகிப்பதும், நிர்வாகத்தை நீதியாகச் செலுத்துவதும் தான். ஒரு அரசியலின் ஆசை. ஆனால் இரண்டு காரியங்களும் சரியாக நடைபெறுவதில்லை.

திருடனைப் பிடித்துவிட்டால் போதாது. அவன் திருடியதையும், திருடும்போது அவனைப்பிடித்ததையும் மூன்றாவது ஆள் ஒருவன் நேருக்கு நேர் பார்த்ததாகக் கோர்ட்டில் வந்து சாட்சி சொல்லவேண்டும். இல்லாவிட்டால் குற்றம் நிரூபணமாகாது. கொள்ளையடிப்பவனும் கொலை செய்பவனும் சாட்சி வைத்துக் கொள்ளாமல் அப்படியெல்லாம் செய்யக்கூடாது என்று—செய்ய மாட்டார்கள் என்று—நீதி ஸ்தலங்கள் கருதுவதாக இதற்கு அர்த்தமில்லை.

நிரபராதிகள் தண்டிக்கப் பட்டுவிடாமல் இருக்க வேண்டுமே யென்று கவலைப்பட்டுதான் சாட்சி யெங்கே என்று கோர்ட்டுகள் கேட்கின்றன போலும்! எனவே உண்மையான குற்றவாளிக்குத் தண்டனை வாங்கித் தரவேண்டுமானாலும் பொய்ச் சாட்சி தயாரித்தாக வேண்டிய சங்கடம் போலீஸ்காரனுக்கு ஏற்பட்டிருக்கிறது.

உண்மையை நிலைநாட்டப் பொய் சாட்சி தயாரிக்கவேண்டிய அவசியத்தினால் பொய்யை உண்மைபோல் காட்டும் பண்பும் சில சமயம் ஏற்பட்டு விடத்தான் செய்கின்றன.

சமூக ஊழல்களைப் போக்கவோ நீதி ஒழுங்கு இவற்றைக் காக்கவோ வேலை செய்யும் சர்க்கார் ஊழியர்கள் உயர்ந்த பண்புடையவர்களாக இருந்தாலன்றி, நீதியும், நிர்வாகமும் வெறும் நாடகமாகத்தான் இருக்கும்.

நீதியையும் ஒழுங்கையும் நிலைநாட்ட மக்களுக்கு உதவி செய்யும் பண்பு நமது சர்க்கார் சிப்பந்திகளுக்கு இருப்பதில்லை. அதற்குப் பதில் குற்றவாளிகளைக் கண்டு பிடித்து அவர்களைத்தண்டிப்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருக்கப் பழகியிருக்கிறார்கள். குற்றவாளிகள் கிடைக்காவிட்டால் யாரையாவது குற்றவாளியாக்கி, கேஸ் கண்டு பிடித்து விட்டதாகக்காட்டும் பொய்யான கணக்கப்பிள்ளைகளாகி விடுகிறார்கள். இந்த அடிப்படையில் நிலைமையின் விளைவு என்ன ஆகிறதென்றால், குற்றத்தைத் தொழிலாகப் புரிகிறவர்களும், அதைத் தடுக்க அதிகாரம் படைத்தவர்களும் பரஸ்பர நன்மையைக் கருதி ஒருவர்க்கொருவர் காட்டிக் கொடுக்காத நண்பர்களாக மாறிவிடுகிறார்கள். யாரோ வழியில் போகும் நிரபராதியை மாட்டி வைத்துக் கணக்கு சரிகட்ட சிரமப்படுகிறார்கள்.

ஒரு பஸ் முதலாளி கணக்குக்குமேல் எவ்வளவு பிரயாணிகளை வேண்டுமானாலும் ஏற்றிக்கொண்டு கொள்ளை லாபம் சம்பாதித்துக் கொண்டேயிருப்பான். வழியிலிருக்கும் போலீஸ் ஸ்டேஷன்களிலெல்லாம் நிறுத்தி கண்டக்டர் கையெழுத்துப் போடுவான், பீட் நிற்கும் கான்ஸ்டேபிளுக்கெல்லாம் சலாம் போடுவான், சப்இன்ஸ்பெக்டர் வீடுகளுக்குப்போய் அவர்கள் மனிதர்களை ஓசிக்கு ஏற்றிப் போவான். யாரும் ஏனென்று கேட்கமாட்டார்கள். ஆனால் போலீஸ்காரன் மாதக் கடைசியில், பஸ் முதலாளியிடம் சொல்லி வைத்து ஏதாவது ஒரு கண்டக்டரை அல்லது ஓட்டை வண்டியை சார்ஜ செய்து ஒப்புக்கு ஒரு கேஸ் கொண்டு போவான். அது விசாரணை, தண்டனை எல்லா நாடகங்களுடனும் முடிவுறும். மறுபடியும் ஓவர் லோட் தாராளமாக நடைபெற்றுக் கொண்டுதான் இருக்கும். இது ஒப்பந்த நீதி பரிபாலன நாடகம்.

டிக்கட் பரிசோதகர்களுடன் நட்பு வைத்துக் கொண்டு பரம்பரையாக இஷ்டம்போல் பரிவாரங்களுடன் பிரயாணம் செய்யக் கூடியவர்கள் இருப்பார்கள். உண்மையிலேயே டிக்கட் வாங்கி அதைப் போக்கடித்து விட்டு மாட்டிக்கொண்டவர்கள் பாடுதான் ஆபத்து.

இப்போது கள்ளமார்க்கட் ஒழிப்பு வேலை இதே கதிக்கு வந்திருக்கிறது. கள்ளச் சந்தையில் காசு சேர்த்துக் கோடீஸ்வரனாக ஒருவன் கொழுத்து வளர்ந்து கொண்டேயிருப்பான் ஏதோ சட்டத்திற்குப் பயந்து வியாபாரம் செய்பவன், தான் அதிகம் சம்பாதிக்க முடியவில்லையே என்று ஏங்குபவன் ஒருவன் இருப்பான். இந்த எளியவனுக்கு வருகிறது ஆபத்து. எப்படி? ஒரு அதிகாரி ஏதோ ஒரு ரூபாய் நோட்டில் கையெழுத்துப்போட்டு, குறிப்பிட்ட வியாபாரியிடம் கள்ளமார்க்கெட் பண்ணுவதற்கென்றே ஒரு ஆளைத் தயாரித்து அனுப்புவான். மிகவும் ஆவலுடன் கவலை நிறைந்தவனாக, அந்த சாமான் கிடைக்காமல் தனக்கு உயிர் தரிக்காது என்பதுபோல கடைக்கு வருவான். என்ன விலை வேண்டுமானாலும் தருவதாகக் கூறி, கடைக்காரனுக்கு புத்தி பேதலித்து காசுக்கு ஆசைப்பட்டு நிற்கும்படி ஊக்குவிப்பான். நெடுநாளாகப் பயந்து கொண்டிருந்தவன், நொடி நேரத்தில் பண ஆசைக்குத் தூண்டப்பட்டு மயங்கும் நேரத்தில் குறிப்பிட்ட அதிகாரி திடீரென்று வந்து பிடித்துக்கொள்வார்.

கள்ளமார்க்கெட் விலை பெறுபவனைவிட எந்த விலை வேண்டுமானாலும் கொடுக்கத்தயாராயிருப்பதாகக்கூறி கடைக்காரனை தைரியப்படுத்துகிறவனைத் தான் முதலில் குற்றவாளியாகக் கருதவேண்டும். திருட்டுச் சாமானை விலைக்கு வாங்குவது கூட குற்றம். அதைப்போல, கள்ளச்சந்தை விலைக்கு ஒன்றை விற்கும்படி ஒருவனைத் தூண்டுவதும் குற்றம் என்று விதி செய்ய வேண்டும்.

தொடர் நாடகம்

# ஞானோதயம்

*

[கே. ராஜகோபாலன்]

**அங்கம்-1. ]** **[ காட்சி-4.**

[அசோகனின் குடிசை. வழக்கம்போல அவன் பாடிக்கொண்டிருக்கிறான்.

ராகம் :— **மோகனம்**

**பல்லவி**

மனிதனுக் கித்தனை மயக்கந்தானுகுமோ
மகத்துவச் சக்தியை மறந்திட்டுத் திரிந்திடும்
(மனித)

**அ. பல்லவி**

தனிப்பெரு மருளுடன் தாயகந் தாங்கிடும்
தற்பரமானவன் தாத்பர்யம் புரியாத
(மனித)

**சரணம்**

பருவம் பருவமாய் பலபல வண்ணமாய்
புவன முழுதுமே யொளிர்ந்து வீசிடும்
உருவாகிடு மெல்லாப் பொருளாகிடுமவன்
உறவினை வெறுத்துமே ஒதுங்கியே ஓடிடும்
(மனித)

முரளி அப்பாட்டின் இனிமையில் மூழ்கியவனாய் உட்கார்ந்திருக்கிறான்]

அசோகன் :— (பாட்டை நிறுத்திவிட்டு)...முரளி!...என் தாயார் வந்திருந்தாள் !... உனக்குத் தெரியாதா ?...

முரளி :— குருஜீ ! நான் அப்போது இங்கு இல்லை !... அவர்கள் என்ன சொன்னார்கள் ?...

அசோகன் :— என்னை வீட்டிற்கு வந்து விடும்படி வருந்தியழைத்தாள் !... பாவம் !... பிள்ளைப்பாசம் அவளை இங்கே தள்ளுகிறது ; ஆனால் என் லட்சியம், என்னை, எல்லாவித சுகங்களையும் வெறுத்து விடும்படி தூண்டுகிறது !... அவளுக்கு நான் தெய்வம் ! எனக்கோ சத்தியமே தெய்வம் !... அது போகட்டும் ! நான் ஏற்கனவே சொன்னது போல, எனக்கும் இந்த அரசருக்கும் நேருக்கு நேராக போராட்டம் ஆரம்பித்து விட்டது !...

முரளி :— (ஆச்சரியத்துடன்)... அது என்ன குருஜீ ?...

அசோகன் !... முரளி !...நான் ராஜசபைக்கு உடனே வந்து பாடவேண்டுமென்று இந்த அரசர் எனக்கு ஸ்ரீமுகம் அனுப்பித்தார்...ஆனால் நான் போகவில்லை !...

முரளி :— பிறகு,...

அசோகன் :— பிறகு என்ன நடக்கப்போகிறது என்று சொல்லவும் வேண்டுமா ?...இந்த அரசரை ஆட்டுவிக்கும் சந்திரசேனன் என்பவர் என்னைப் பயமுறுத்தி வற்புறுத்துவதற்காக இங்கு வரப் போகிறாராம் !... வரட்டும் !... நான் பேயாட்டத்தைப் பார்க்க விரும்புகிறேன்...
(அப்போது சந்திரசேனனே, விமலன் பின்தொடர அங்கு வருகிறான்)

அசோகன் :— (சந்திரசேனனைக் கண்டதும்) வாருங்கள் !... அமருங்கள் !... நீங்கள் இந்த எளியவன் குடிசைக்கு வந்த காரணம் என்னவோ ?...

சந்திர :— (உட்கார்ந்து கொண்டு)... தங்களிடம் அரசருடைய உத்திரவைக் கொடுக்க வந்துள்ளேன்.

அசோகன் :— (ஆச்சரியத்துடன்)... அரசருடைய உத்திரவா ?... எனக்கா ?... அது என்ன ...

விமலன் :— (தனக்குள்)...ஆண்டிக் குறும்பைப் பார் !...

சந்திர :— தாங்கள் இன்று முதல் ராஜசபைக்கு வந்து பாடியாக வேண்டும்.

அசோகன் :— (சிரிக்கிறான்) ராஜசபைக்கு வந்து நான் பாடியாக வேண்டும் !... என்ன, நானா?...

சந்திர :— (கண்டிப்பாக) ஆமாம் !... இதோ உத்திரவு...
(சந்திரசேனன் உத்திரவை அசோகனிடம் கொடுக்கிறான்)

அசோகன் :— (உத்திரவை வாங்கிப் படித்து விட்டு)... என்ன ? தங்கள் அரசர் என்னை நிர்ப்பந்தப் படுத்த விரும்புகிறாரா ?

சந்திர :— ஏன் அப்படிக் கேட்கிறீர்கள் ?...உமது கலையை அரசர் கௌரவிக்க விரும்புகிறார்.

அசோகன் :— இல்லை யில்லை ! என்னை அடிமைப்படுத்த உபாயத்தை அரசர் தீர்மானித்து விட்டார்... சந்திரசேனன் அவர்களே ! ...என்னை எவரும் அடிமைப் படுத்தி விடமுடியாது என்று உமது அரசரிடம் சொல்லிவிடுங்கள்.

விமலன் :— (தனக்குள்)... அரசாணையை மீற இவன் சுதந்திரம் கேட்கிறான் !......

சந்திர :— (சிறிது கோபத்துடன்) எமது அரசர் உமக்கும் அரசர் தான் என்பதை உணர்ந்து பேசுங்கள்.

அசோகன் :— (நிதானமாக)... ஐயா ! ஆத்திரப்படாதீர்கள். எனக்கு அரசர் கடவுள்தான் ! நான் ஒரு சுதந்திரக் குரல்!...

சந்திர :— ராஜ விஸ்வாசமே உண்மையான சுதந்திரம் !......

அசோகன் :— ஐயா ! அகங்காரத்துடன் அடிமைப்படுத்த நினைக்கும் அரசர்களை நான் மதிப்பதில்லை. விஸ்வாசத்தை எவரும் நிர்ப்பந்தத்தால் பெறவே முடியாது!...

சந்திர :— அசோகரே ! அரசர்களைப் போற்றிப் பாடாத ஒரு பாடகனுக்கு சீரிய லட்சிய மிருக்கவே முடியாது.

அசோகன் :— சந்திரசேனரே! நான் என் ஜீவ லட்சியத்திற்காகவே கீதம் பாடுகிறேன் என்னுடைய கலை ஆதிக்க வெறியர்களின் கேளிக்கைப் பொருளல்ல. எனது கலையைத் தரிசிக்க ராஜ சபைதான் இங்கு வரவேண்டுமேயொழிய, நான் உமது அரசரின் காலடியில் வந்து விழ மாட்டேன்.

விமலன் :— (தனக்குள்)...பரதேசி பயல்களுக்கு லட்சியமாம் லட்சியம் !...

சந்திர :— அசோகரே ! தங்களுடைய பதில் எனக்கே ஆத்திரத்தை மூட்டுகிறதே !

விமலன் :— கோபத்தில் துள்ளிக் குதிக்கத் தோன்றுகிறது !......

முரளி :— (ஆத்திரத்துடன்) பற்களை உடைத்துக்கொண்டுவிடாதீர்கள் !

அசோகன் :— முரளி!......நீ சாந்தமா யிரு !......சந்திரசேனரே! ......உமது கோபத்திற்கோ அல்லது உமது அரசருடைய கோபத்திற்கோ நான் கவலைப் படவில்லை!......

சந்திர :— (அதிகாரத்துடன்)......தாங்கள் இன்று ராஜ சபைக்கு வந்து பாடியே ஆகவேண்டும்!......அரசருடைய உத்திரவை நான் நிறைவேற்றியாகவேண்டும்.

விமலன் :— ......சட்டம் சட்டந்தான் !......

முரளி :— சட்டம் ஒரு கழுதை, அதை உதைத்துத் தள்ள எங்களுக்குத் தெரியும் !......

அசோகன் :— முரளி...... நீ பேசாதிருக்க வேண்டும்.......... சந்திர சேனரே !......நான் அங்கு ஏன் வரவேண்டும்? நான் என்ன குற்றவாளியா ?

சந்திர :— ராஜ சபைக்குப் போகிறவர்கள் எல்லாம் குற்றவாளிகள் என்று நீங்கள் சொல்லுகிறீர்களா ?

அசோகன் :— (உறுதியான குரலில்) சம்பந்தமில்லாதவர்கள் வேற்றிடத்துக்குப் போவதும் குற்றமே யாகும் !......

சந்திர :— உமக்கு ராஜசபையின் அதிகாரத்தைப் புரிய வைக்க வேண்டியது தான் என் வேலை !...

அசோகன் :— பேய்க்கூத்து எப்படியிருக்கும் என்பதை நான் நன்றாகப்புரிந்து கொண்டிருக்கிறேன் !...

சந்திர :... (கோபமாக)... அப்படியானால் நீங்கள் அரசருடைய விரோதி !...அப்படித்தானே !...

அசோகன் :— (கம்பீரமாக)... அப்படித்தான் !... ரத்த வெறியர்கள் இரும்புக் கரங் கொண்டவர்கள், நெருப்புக்கண் கொண்டவர்கள், பொய்யைத் தொழுது அடிமை செய்பவர்கள், -இவர்களுக்கு நான் விரோதிதான் ! இதில் சந்தேகமேயில்லை !...

முரளி :— (தன்னை மறந்தவனாய்)... இதில் சந்தேகமில்லை !...

விமலன் :— (தனக்குள்)... கடவுளின் வாரிசு ராஜா ! ராஜாவுக்கு விரோதி இவர்கள் !... எனவே, கடவுளுடைய விரோதிகள் இவர்கள்!...இவர்களை ஒழிக்க கடவுள் விமலனையும், வீரத்தையும் படைத்திருக்கிறார் !...

சந்திர :— (உரக்க)... நீர் பெரிய ராஜத்துரோகி !...நான் அரசாணையை நிறைவேற்றித் தீரவேண்டும் !...

அசோகன் :— (அமைதியாக) நீர் உமது கடமையைச் செய்யும் !...

முரளி :— (படபடப்புடன்)... நான் உயிரோடிருக்கும் வரை,...

அசோகன் :— முரளி ! பதறாதேயப்பா !...

சந்திர :— அசோகரே ! நான் உம்மைக் கைது செய்கிறேன் !...

அசோகன் :— இதோ ! நான் கைதியாகச் சித்தமாயிருக்கிறேன்.

சந்திர :— அசோகரே ! உம்முடைய பிடிவாதத்தின் விளைவு என்னவாகும் என்று நீர் உணர்ந்து கொண்டீரா ?...

(11-ம் பக்கம் பார்க்க)

# சிவாஜி

ஆசிரியர் :— திருலோக சீதாராம்

"சிவாஜி" சந்தா
ஆண்டு 1-க்கு ரூ. 3—8—0
தனிப்பிரதி அணா 1
ஒரு வருஷத்திற்கு குறைந்த சந்தா கிடையாது.
மானேஜர் : "சிவாஜி"
தபால் பெட்டி நெ. 332
தெப்பகுளம் P. O.
திருச்சிராப்பள்ளி.

கோட்டை 15 | திருச்சி 14—5—50 விக்ருதி-ஊ வைகாசி-மீ 1-உ | முற்றுகை 24

# ஆட்சிக்கலை

## தேசீயத் திட்டம்.

ஆரம்பத்திலிருந்து அந்தம் வரை எல்லா தேசீய நிர்மாண வேலைகளும் சரியாக-திறமையாக திட்டப்படி நடக்காவிட்டால் இன்றைய நவயுக சமுதாயம் முன்னேறிச்செல்லவே முடியாது. சமூக—பொருளாதார ஸ்தாபனங்கள் காலப்போக்கையொட்டி விரிவாக்கிக் கொண்டிருக்க வேண்டும். முழுக்க முழுக்க சமுதாயம் திட்டவட்டமான முறைப்படி அமைக்கப்படுவதிலிருந்து எந்த தேசமும் தப்பித்துக்கொள்ள முடியாத அளவுக்கு இன்று அவசியம் ஏற்பட்டுவிட்டது.

வெற்றிகரமான தேசீயத்திட்டத்தை அமுல் நடத்த பூரா அதிகாரமுள்ள ஒரு மத்திய அதிகாரம் மிகவும் அவசியமானது. இந்த மாதிரியான திட்டம் வகுக்க வெறும் நல்லெண்ணம் இருந்தால் மட்டும் போதாது. இதற்கு நிபுணர்களே வேண்டும். வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்க வல்ல திட்டமே சிறந்தது.

என்ன பாடுபட்டும், வேலையின்மையை ஒழிப்பதையே தங்களின் பிரதான நோக்கமாக திட்டம் வகுப்பவர்கள் கொள்ள வேண்டும்.

'பொருளாதாரத் திட்டம் வகுக்க வேண்டும்' என்று சொல்கிறவர்கள் உற்பத்தி விநியோகத்தில் கட்டுப்பாடான நிர்ப்பந்தங்களை ஏற்படுத்த ஆசைப்படுகிறார்கள் என்று புரியாத ஒரு சிலர் சொல்லக் கூடும்.

இன்று சமூகத்தில் ஒரு நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. இந்த நெருக்கடியிலிருந்து நாம் மீள வேண்டும். அது மட்டுமா? எதிர் காலத்திலும் இது போன்ற நெருக்கடிகள் நமது முன்னேற்றத்தைத் தடை செய்ய முடியாதபடி ஒரு ஸ்தாபன அமைப்பை நாம் உருவாக்க வேண்டும்.

இன்றுள்ள பொருளாதார அமைப்பை நாம் நீடித்து அனுமதிக்க முடியாது: யுத்தத்தைத் தடுப்பதற்கு உதவி செய்யாத, பட்டினிக் கொடுமையை ஒழிக்க உதவி செய்யாத, இன்றைய ஒரு ஏற்பாட்டை நாம் அனுமதிக்க முடியாது. அதன் 'கொடியின்' கீழ் இருந்து கொண்டு செயல் புரிய முடியாமல் இருக்கவும் கூடாது. இதிலிருந்து மீள நாம் ஒரு வழி காணத்தான் வேண்டும். இதற்குத்தான் அரசு தேர்ந்த நிபுணர்களைக் கொண்டு திட்டம் வகுத்து வேலை செய்ய வேண்டும் என்று நான் வற்புறுத்துகிறேன். 'காகிதத்' திட்டங்களோ அல்லது வெறும் கோஷங்களோ நிர்மாணத்திற்கு உதவி செய்ய முடியாது. எல்லாத் தேவைகளையும் திட்டப்படி ஒழுங்காக அரசு சமாளிக்க வேண்டும்.

இன்றுள்ள நிலையில், விஞ்ஞான முன்னேற்றத்திற்குத் தகுந்தபடி உணவு உற்பத்தி—வினியோகத்திலிருந்து ஊசி உற்பத்தி—வினியோகம் வரை திட்டம் வகுக்க வேண்டும். குழப்பத்தை விளைவிக்கும் திட்டமோ-அல்லது சுரண்டலை அதிகப்படுத்தும் திட்டமோ இனி மக்களுக்குத் தேவையில்லை.

உற்பத்தியை அதிகரிக்க உற்சாகம் வேண்டும். செயல் திறனைப் பெருக்குவதன் மூலமே இந்த உற்சாகத்தை நாம் பெற முடியும். உழைப்பவர்களின் களிப்பில் தான் இந்த உத்சாகமுள்ள செயல் திறன் பிறக்க முடியும் இதைச் சிருஷ்டிக்க உற்பத்தியின் பலனில் அவனுக்கு நியாயமான பங்கு வேண்டும், பங்கு என்றால் ரூபாய்-அணா-பைசாவில் அல்ல! உற்பத்தி செய்கிறவன் உன்னதமான திருப்தியுடன் தனது தேசீயக் கடமையைச் செய்கிறான் என்பதில் தான், இந்த 'திருப்தி' என்ற 'பங்கு' இருக்கிறது.

உன் பட்டினியைப் பற்றி எனக்கு அக்கரையில்லை. ஆனால் உற்பத்தியை நீ பெருக்கு" என்ற கோஷம் உற்பத்தியையே குலைத்து விடும். அதற்காக, உற்பத்தி செய்யும் மனிதன் ஒன்றும் செய்யாமல் உரிமைகளைப் பெற அனுமதிக்கவே முடியாது.

உறுதியான கொள்கையை அமுல் செய்யும் துணிகரமான செய்கைதான் தேசீயத் திட்டம் வகுப்பவர்களுக்கும் அதை நடத்துகிறவர்களுக்கும் அவசியமான தேவையாகும்.

வாங்கும் சக்தியைப் பெருக்குவதன் மூலமே உற்பத்திப் பொருள்களுக்கு கிராக்கி ஏற்படுகிறது. இந்த "கிராக்கி"தான் நமது "பொருளாதார பலம்" என்பதை மறந்து விடக் கூடாது. இந்த கிராக்கியை சீராகப் பயன் படுத்திக் கொண்டு வாழ்க்கை வசதிகளுக்கு அத்யாவசியமான பொருள்களையும், அரசின் பொக்கிஷத்தை நிரப்பவல்ல சரக்குகளையும் நாம் உற்பத்தி செய்யவேண்டும். இந்தப் பணியில், அதிருப்திக்கோ, சுரண்டலுக்கோ இடமில்லாத தேசீயத் திட்டமே நமக்கு வேண்டும். சமுதாய ஒப்பந்தம் எனப்படுவது அமைதியான — சுபிட்சமான வாழ்வுக்கான ஒரு தேசீய திட்டம் என்பதுதான் பொருள். இதைப் புனிதமான மனிதக் கடமை என்று நாம் மதிக்கும் போதுதான், நம்மை பயமுறுத்தும் பல அரசியல் சமூக — பொருளாதாரத் தீமைகள் மறைந்து போகும்.

"கொடுமுடி"

"கட்டுப் பாடான திட்டம்" என்பது வெறும்பிரமைதான். எதுவுமே சாஸ்வதமாக இருக்க முடியாது. இயற்கையின் விசுவரூபம், இந்த நியதிக்கு விரோதமாகவுள்ளது", என்று அராஜகவாதிகள் பேசுகிறார்கள். இவர்கள் மனிதன் மாண்பினை மறுப்பவர்கள். உலகாயதத் தேவைகளையொட்டியே நாம் பல அமைப்புகளைச் செய்து கொண்டிருக்கிறோம். இதெல்லாம் சோதனைகள்தான் என்றாலும், இந்தச் சாதனைகளைச் செய்து கொண்டேதான் மனித சமுதாயம் காலப்பாதையில் பிரயாணம் செய்து கொண்டிருக்கிறது. நாம் வாழும்வரை, நமக்கு தினம் பசி ஏற்படுவதுபோல, நமது பல தேவைகளைப் பெற்றுக்கொள்ள அவசியம் ஏற்பட்டுக்கொண்டு தானிருக்கிறது. இந்த அவசியத்தைப் பூர்த்திச் செய்யவே பல திட்டங்களை நாம் வகுத்துக்கொள்ளுகிறோம். இந்தத் திட்டங்களின் சாஸ்வதத்தன்மையைப் பற்றி நாம் சிந்திப்பதைக் காட்டிலும், இவைகளின் அவசியத்தையே நாம் அதிகம் உணரவேண்டும். புதிய அவசியங்கள் ஏற்படும்போது பழைய ஏற்பாடுகளும் புதிய வடிவங்களைப் பெறுகின்றன. ஆனால் அவசியம் என்பது மட்டும் நமது வாழ்வின் கடைசி விநாடி வரை நம்மைத் தொடர்ந்தே வருகிறது. எனவே, 'எல்லாம் விதிப்படி நடக்கிறது எல்லாம் ஆண்டவன் உள்ளப்படி நடக்கிறது' என்று சொல்லிக் கொண்டு, கட்டுப்பாடில்லாமல்-திட்டமில்லாமல் வாழும் மனிதனோ அல்லது சமுதாயமோ இன்பத்தைக் காணவே முடியாது.

"எது வருமாயினும் களி மூழ்கி நடத்தல் முறை"— இது தான் தேசீயத்திட்டம் வகுத்து வாழ்வை நடத்தும் அரசின் உயர்ந்த லட்சியமாகும்:

வெறும் "தத்துவ" அடிப்படையில் நாம் திட்டம் வகுக்கவே கூடாது. தத்துவ வேதங்கள் ஆட்சிக் கலைக்கே ஒரு முட்டுக்கட்டையாகும். மாறிக் கொண்டேயிருக்கும் மனித மனோபாவத்தையொட்டித்தான் திட்டங்கள் "காரிய சாத்திய" அடிப்படையில் உருவாக வேண்டும். எந்தத் திட்டமும் அதையேற்று நடத்துகிறவர்களின் திறமை — உறுதியான நம்பிக்கையைப் பொறுத்துதான் வெற்றியோ அல்லது தோல்வியோ அடைகிறது.

---



# சிவாஜி தர்பார்

## சந்தர்ப்ப ஆட்சிக் கொடுமையால்

## மீண்டும் மொழி அடிமைத்தனமா?

### ஹிந்தி வால் நீட்டுகிறது.

மரியாதைக்காக எத்தனை காலம்தான் மௌனமாக இருக்க முடியும்? தேசீயத்தின் பெயரால் எவ்வளவுதான் அக்கிரமங்களை சகித்துக் கொள்ள முடியும்? சமயம் வந்தால் வாய் விட்டுச் சொல்லாமல் இருக்க முடியுமா?

செண்டிமெண்ட் என்று ஆங்கிலத்தில் சொல்லுவார்கள். தமிழில் அக்கியானம் என்று விளக்கிக்கூறலாம். பாசம் என்று வழுக்கி விழலாம். தேசியம் என்ற பேச்சு நமக்கு இப்போதெல்லாம் பொருளற்ற வெறும் சொல்லாகிக் கொண்டிருக்கிறது. இந்த நிலையில் கொஞ்சம் சுயபுத்தியுள்ளவர் யாராணுலும் சற்று அந்த வார்த்தையின் மயக்கத்தை விட்டு வெளியே வர வேண்டியது தானே! வெறும் செண்டிமெண்டுக்காக தேசீயத்தை இழுத்து பிடித்துக்கொண்டு தொங்குவது அழகுணர்ச்சிக்காக மாத்திரமானுல் கூட தொலைந்து போகட்டுமென்று இருக்கலாம். ஆனுல் அது நமது அடிப்படை வாழ்வைச் சிதைக்க ஒரு சிலருக்கு ஒரு பலமான கருவியாகும் போது நாம் கொஞ்சம் தனியாகப் பிரிந்து எதிர் முகாம் போடுவதில் தவறில்லை.

வெள்ளையர் ஆட்சி இங்கு இருக்கும் வரையில் தேசீயம் என்ற சொல்லுக்கு கூடமான ஒரே பொருள் "விடுதலை உணர்ச்சி" என்ற அளவில் இருந்தது. இப்போது சுதந்திரம் வந்த பிறகு இந்த வார்த்தையை உபயோகப் படுத்தி ஆளுக்கொரு விதமாகத் தங்கள் சொந்த செல்வாக்கையும், அதிகாரத்தையும் வலுப்படுத்தி தங்களைச் சேர்ந்த ஏனையோரை அடக்கி ஆள ஆரம்பித்து விட்டார்கள். எனவே ஒரே முகாமில் இன்று வரை இருந்தவர்களானுலும் இன்று தங்களுக்குள் வியூகம் வகுத்து நிற்க வேண்டியேற்பட்டு விட்டது இயற்கை தானே!

காங்கிரஸ்காரர்களுக்குள்ளேயே இப்போது பல கோஷ்டிப் பிரிவினைகள் பல்வேறு வடிவங்களில் தோன்றியிருக்கின்றன. இவற்றிற்குப் பல்வேறு அடிப்படைகள் உண்டு. மொழியின் பெயரால் இப்போது ஒரு புகைச்சல் ஏற்பட்டிருப்பதைக் காண்கிறோம். சென்ற ஜில்லா போர்டு தேர்தல்களில் காங்கிரஸ்காரர்களே காங்கிரஸை எதிர்க்க நேர்ந்தது போலவே காங்கிரஸ் வாதிகளே ஹிந்தி மொழிக்கு எதிராகக் கருத்துக்களை வெளியிடவும் நேர்ந்திருக்கிறது. எதிர்ப்புக் குரல் தமிழ் நாட்டுக்குப் புதிதல்ல. இதுவரை கேட்ட குரல் காங்கிரஸுக்கு எதிரிகாளக இருக்கும் திராவிடக் கழகத்தின் முகாமில் இருந்து புறப்பட்டு எதிரொலித்தது. ஆனுல் இப்போது கேட்கும் குரல் தேசிய வாதிகளின் முகாமிலிருந்தே ஒரு சாரார் எழுப்புவது.

வெளியிட்டுச் சொன்னுல் எதிர்க்கட்சிக் காரருக்கு இடம் கொடுத்தது போலாகுமேயென்று உள்ளுக்குள் புரையோடும் வரையில் சும்மா இருக்க நீதியில்லையென்பதுதான் இதற்குக் காரணம். ஹிந்தி—கதர்—காந்தி—தேசீயம் இப்படி சக்ர வியூகங்களை வகுத்து ஆட்சி அமைப்பைக் காக்கும் காங்கிரஸ் கோட்டையின் காவல் படையில் வீரர்களுக்குள்ளேயே இப்போது கலகம் மூண்டிருக்கிறது. சிப்பாய்க் கலகத்தின் போது—அதற்குமுன் வெள்ளையர்க்கே விஸ்வாசமாக ஊழியம் புரிந்தும், அந்த நேரத்திலும் வெள்ளையர் போர்ப் படைச் சேவகத்தில் இருந்துகொண்டும் இருந்த—சிப்பாய்கள் தங்களை ஆட்டிப் படைப்பவர்களையே எதிர்த்துக் கொதித்தெழுந்த சுதந்திரப் போர் போலத்தான். காரணம் அன்று சிப்பாய்களின் தன் மான உணர்ச்சியை ஆட்சியாளர்கள் சிதைக்கப் பார்த்தார்கள். இன்று காங்கிரஸ் படை வீரர்களில் அவரவர் தாய்மொழிக்கு அவமதிப்பு ஏற்பட்டிருப்பதால் இன்று ஹிந்தி எதிர்ப்புக் குரல் படைக்குள்ளேயே புறப்பட்டிருக்கிறது.

இப்போது நமக்குப் பொது எதிரி யாருமில்லை. கிடைத்த புது வாழ்வில் மாகாணங்கள் தங்கள் பங்கை சமசந்தர்ப்பமாகப் பெற உரிமையுண்டு. இந்த உரிமையை தேசீயத்தின் பேரால் நசுக்கி விட்டு வட நாட்டார் என்றென்றும் தென்னுட்டினரை அடிமைப் படுத்திக் கொள்ள மொழியின் பேரால் சூழ்ச்சி செய்யும் உண்மையை படை வீரர்களுக்குள்ளேயே பலர் உணர்ந்து கொண்டு வருவது நல்ல காலத்திற்கு அறிகுறி தான்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பிடிப்பு பெயரளவுக்கு விலகி விட்ட பிறகு இந்த நாட்டில் இன்று வடநாட்டாரின் ஏகாதிபத்யம் வலுவடைந்து வருவதைப் பார்க்கலாம். தொழில் வளர்ச்சி, உணவுப் பிரச்னை, கல்வி, ஆட்சி உரிமை போன்ற பல்துறைகளிலும் தென்னுட்டின் நல உரிமைகள் புறக்கணிக்கப் படுவதற்கு ஆயிரக் கணக்கான உதாரணங்களைக் காட்டி வந்திருக்கிறோம். இனியும் காட்ட முடியும். காங்கிரஸுக்கு வெளியே இருப்பவர்கள் இவற்றை கூறும்பொழுது பொறுமையென்றும் குறுகிய மாகாணப் பான்மையென்றும் அதை அலட்சியப்படுத்தி வந்தவர்களெல்லாம்கூட இன்று தாங்களே உண்மையை உணர நேர்ந்திருப்பதுபற்றி நாம் மகிழ்ச்சியே அடைகிறோம்.

ஹிந்தி தேசீய மொழியாக இருந்து தொலையட்டுமென்று ஒப்புக்கொண்டோமே, இப்போது ஹிந்தி தனது ஏகாதிபத்தியத்தை நிலைநிறுத்தவன்றே முயல்கிறது என்று அவர்களே கசந்துகொள்ள ஆரம்பித்திருக்கிறார்கள்.

"கல்கி" தென்னுட்டின் தேசியப் பத்திரிகைகளில் ஒன்று. ஹிந்தி எதிர்ப்புக்காரர்களை அடக்க அரசாங்க முயற்சிகளில் ஆதரவளித்துவந்த பத்திரிகை. அதே பத்திரிகையில்தான் "ஹிந்தி ஏகாதிபத்தியம்" என்ற மகுடமிட்டு "தமிழ் மகன்" என்பார் அருமையான கட்டுரை எழுதியிருக்கிறார். படித்தால் யாரோ காங்கிரஸ் விரோதி எழுதியிருப்பதுபோலக்கூடத் தோன்றும். தேசீய அக்கியானம் இல்லாமல் நேர்மையாகச் சிந்தித்துக் கருத்துக்களை வெளியிட்டிருக்கும் "கல்கி"யின் மெய்த் துணிவுக்கு நாம் பாராட்டுக் கூறுகிறோம். வாசகர்களின் கவனத்திற்கு அந்தக் கட்டுரையில் இருந்து ஒரு பகுதியைக் கீழே தருகிறோம்:

"மெள்ள மெள்ள வந்தானும்-மிளகு என்றானும் சுக்கு என்றானும்" என்பதாக ஒரு பழமொழி உண்டு. "இடத்தைக் கொடுத்தால் மடத்தைப் பிடுங்கினுன்" என்பதாக இன்னொரு பழமொழியும் கேட்டிருக்கிறோம்.

ஹிந்தி பாஷையைத் தேசீய பஷையாக்கும் விஷயம் ஏறக்குறைய அம்மாதிரி நிலைமைக்கு இப்போது வந்திருக்கிறது.

அதிகார ஆசையும் ஏகாதிபத்திய வெறியும் ஒரு தேசத்தார்-ஒரு இனத்தாருக்குத்தான் உண்டு என்பது இல்லை. உலகமெங்கும் சர்வ வியாபகமாக நிறைந்திருக்கின்றன. அந்த ஆசையும் வெறியும் இப்போது வடநாட்டிலுள்ள ஹிந்தி பாஷைப் பண்டிதர்களையும் அரசியல் வாதிகளையும் பிடித்து ஆட்டுகின்றன.

ஹிந்தி பாஷை இந்தியாவின் தேசீய பாஷையாவதோடு அவர்கள் திருப்தியடையத் தயாராயில்லை.

இந்தியாவில் ஹிந்தி ஏகாதிபத்தையே நிலைநாட்டி விடப் பிரியப்படுகிறார்கள். மற்ற பாஷைகளையும் மற்ற பாஷைக்காரர்களையும் ஹிந்தி பாஷைக்கு அடிமையாக்கி விடவே எண்ணுகிறார்கள்.

இதை நாம் ஒப்புக்கொள்ள முடியாது. தாய்மொழிப் பற்றுள்ள யாருமே ஒப்புக்கொள்ள முடியாதுதான்.

ஃ ஃ ஃ

"இத்தனை நாளும் நமது கல்வி முறையில் இங்கிலீஷ் வகித்த ஸ்தானத்தை இனிமேல் ஹிந்தி வகிக்கட்டும்." என்கிறார்கள் ஹிந்தி ஏகாதிபத்திய வாதிகள்.

"இவ்வளவு நாளும் கழுத்தில் புல்லைக் கட்டிக்கொண்டுமென்று தின்றீர்களே! அதற்குப் பதிலாக இனிமேல் கல்லைக் கட்டிக்கொள்ளுங்கள்!" என்கிறார்கள்.

சென்னை மாகாணத்துக் கல்வி மந்திரி கனம் மாதவ மேனன் மேற்படி யோசனையை எதிர்த்தாராம். "இப்படி நீங்கள் விதி செய்தால் அதை எங்கள் மாகாணத்தில் மீறும்படியாகவே இருக்கும்" என்று எச்சரித்தாராம்.

அத்துடன் மேற்படி யோசனை கைவிடப்பட்டதாம். "முடிவாகக் கைவிடப்பட்டது" என்று சொல்லுவதற்கில்லை. மறுபடியும் சந்தர்ப்பம் வரும் போது அதே யோசனையை ஹிந்தி ஏகாதிபத்திய வாதிகள் கிளப்பிக் கொண்டு தானிருப்பார்கள். மற்ற பாஷைக்காரர்கள் விழிப்புடனிருந்து அத்தகைய முயற்சிகளை எதிர்க்கும்படி தானிருக்கும்.

ஏன் இப்படிச்சொல்கிறோமென்றால் மேற்கண்ட யோசனையானது ஒரு தனிப்பட்ட நிகழ்ச்சி அல்ல; ஒரு பெரிய ஹிந்தி ஏகாதிபத்தியப் பிரசார திட்டத்தின் சிறிய அறிகுறியே யாகும்.

வடநாட்டுக் கல்வி ஸ்தாபனங்களில் ஏற்படும் முட்டுக்கட்டைகள் ஒருபுறமிக்க, இந்திய சர்க்கார் உத்தியோகங்களிலும் ஹிந்

(9-ம் பக்கம் பார்க்க)

## இந்தியா—பாகிஸ்தானுடன் பிரிட்டனின் உறவுகள்

பாகிஸ்தான் பிரதமர் ஜனாப் லியாகத் அலிகான் அமெரிக்கா செல்லும் வழியில் பிரிட்டனுக்கு விஜயம் செய்துள்ளது பற்றி "மான் செஸ்டர் கார்டியன்" பத்திரிகை தனது மே 1வ இதழில் தீட்டியுள்ள தலையங்கத்தில் இந்தியா பாகிஸ்தானுடன் பிரிட்டனின் உறவுகள் பற்றியும் விவாதித்துள்ளது.

அப்பத்திரிகை எழுதுவதாவது: 'இந்தியா உபகண்டம் பிரிவினை செய்யப்பட்டது முதல் பாகிஸ்தான் பிரிட்டன் மீது சிறிது கோப உணர்ச்சியை காட்டி வருகிறது. ஜனாப் லியாகத் அலிகானின் இவ்விஜயம் இல தப்பெண்ணங்களை நீக்க அதிகம் உதவும்......தான் அலட்சியம் செய்யப்பட்டு விட்டதாக ஒழுங்காகவோ அல்லது தவறுதலாகவோ பாகிஸ்தான் உணர்கிறது...பாகிஸ்தானின் பொருளாதார அபிவிருத்தி விஷயத்தில் பிரிட்டன் அக்கரை கொள்ளவில்லை என்ற பாகிஸ்தானின் சந்தேகத்தை அண்மையில் கராச்சிக்கு விஜயம் செய்த பிரிட்டிஷ் தொழில் கோஷ்டி நீக்கியிருக்கிறது."

"மான் செஸ்டர் கார்டியன்" மேலும் எழுதுவதாவது: "இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கு மிடையேயுள்ள பல்வேறு தகராறுகளில் பிரிட்டனும், பிரிட்டிஷ் பத்திரிகைகளும் இந்தியாவிற்கு ஆதரவு காட்டுவதாக பாகிஸ்தான் குறைகூறுகிறது. ஆனால் இந்தியாவோ அதே உக்கிரத்தில் பிரிட்டனை "புரோ பாகிஸ்தான்" என குற்றம் சாட்டி வருகிறது. உண்மையில் இந்த நாட்டின் (பிரிட்டனின்) போக்கு என்ன? இந்தியாவும் பாகிஸ்தானும் காமன் வெல்த்திலுள்ள சகோதரர்களாகவே பிரிட்டன் கருதுகிறது. இந்தியாவும் பாகிஸ்தானும் கொண்டுள்ள எண்ணத்தைக் கண்டு பிரிட்டன் பெரிதும் வருந்துகிறது. தற்போதுள்ள தகராறுகள் தீர்க்கப்பட்டு விட்டால் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கு மிடையே பழைய ஒத்துழைப்பு மீண்டும் தானாகவே ஏற்பட்டு விடுமென்றுதான் பிரிட்டன் கருதுகிறது."

பாகிஸ்தான் பிரதமர் அமெரிக்காவில் விவாதிக்கப்போகும் சாத்தியமான விஷயங்களைக் குறித்து இப்பத்திரிகை மேலும் எழுதுவதாவது:

"ஒரு விதத்தில் பாகிஸ்தானின் பொருளாதாரத் தேவைகள் இந்தியாவைக் காட்டிலும் மிகச் சொற்பமே. பாகிஸ்தானில் தானிய உற்பத்தி உபரியானதாகும். அத்துடன் வர்த்தக பாக்கி விஷயத்திலும் சாதகமான நிலையில் இருந்து வருகிறது. தற்போது வேலைநடைபெற்று வரும் அநேக நீர்ப்பாசன, மின்சார திட்டங்கள் முடிவடைந்து விட்டால் பாகிஸ்தானின் பொருளாதார நிலைமை மேலும் அபிவிருத்தி அடையும். இன்றைய உலகில் ஒவ்வொரு நாடும் தனது கைத்தொழிலை விஸ்தரித்துக் கொள்ளத்தான் விரும்புகிறது. இதற்கு பாகிஸ்தான் விதிவிலக்கல்ல; இவ்விஷயத்தில் பாகிஸ்தானுக்கு மூலதனம் தேவைப்படுகிறது; அமெரிக்காவிலிருந்து இது விஷயமாக ஏதாவது உதவி கிடைக்குமா என்பது திட்டங்களின் தரத்தையும், நம்பிக்கை வளர்வதையும் தான் பொருத்திருக்கும்."

வெளி நாடுகளிலுள்ள தொழில் அதிபர்களிடையே பூரண நம்பிக்கையை ஏற்படுத்த வேண்டுமானால் காஷ்மீர் விவகாரத்தில் உடன்பாடு ஏற்படுவது அவசியமென 'மான் செஸ்டர் கார்டியன்" கருதுகிறது.



## நியூயார்க்கில் பிரிட்டிஷ் மோட்டார் காட்சி

நியூயார்க்கில் நடைபெற்ற பிரிட்டிஷ் மோட்டார் காட்சி மிகப் பிரமாதமாக வெற்றி ஈட்டியுள்ளதென நியூயார்க்கிலிருந்து வரும் செய்திகள் கூறுகின்றன. காட்சி ஆரம்பமான தினத்தன்றே 32,000 நபர்கள் விஜயம் செய்தனரென்றும், எதிர்ப்பார்த்ததைவிட அதிகப்படியான ஆர்டர்கள் கிடைத்துள்ளன வென்றும் அச்செய்திகள் தெரிவிக்கின்றன. காட்சி ஆரம்பமான 15 நிமிடங்களுக்குள் ஆஸ்டின் கம்பெனி நான்கு ஏ-40 என்ற கார்களையும், மூன்று ஸ்டேஷன் வாகன்களையும் விற்பனை செய்தது. முதல் இரண்டு நாட்களுக்குள் நப்பீல்ட் ஸ்தாபனத்திடம் 500 கார்களுக்கான ஆர்டர் கொடுக்கப்பட்டுள்ளது. தங்களுடைய மோட்டார்கார் விற்பனை மிக நன்றாக நடைபெற்று வருவதாக ரூட்ஸ் கம்பெனியார் அறிவித்துள்ளனர். ரோல்ஸ் ராய்ஸ், டெய்ம்லர் கார்களுக்கும் ஆர்டர் கிடைத்துள்ளது.



அறவலி காத்துநாளும் அன்னையின் பணிக்கென்றே—நம்
உறையிலே உறங்கும் வீரம் உருவினோம் ஓங்கிவிட்டோம்.

திருச்சி 14—5—50

# தும்பறுந்த மாடு

டாக்டர் பிரபுல்ல சந்திர கோஷ் சமீபத்தில் சென்னை மாகாணத்திற்கு வந்துபோனார். காங்கிரஸ்காரர்களின் ஒழுக்கம் பற்றி உருக்கமான கருத்துக்களை வெளிட்டார். புதிய கருத்தொன்றுமில்லை. அடிக்கடி பல தலைவர்களும் கூறுவதுதான். ஆயினும் வெளி மாகாணத்திலிருந்து வந்த ஒருவர், கொஞ்சம்கூட தாட்சண்யம் பார்க்காமல் உண்மையை இங்குவந்து வெளியிட்டபடியால் அது நம்முடைய கவனத்தைக் கவருகிறது.

இன்று நமது நாட்டில் காங்கிரஸ் ஆட்சி நடைபெறுகிறது. ஒரு பகுதி காங்கிரஸ் வாதிகள் அரசாங்கப் பதவிகளிலும், மற்றோர் பகுதியினர் காங்கிரஸ் ஸ்தாபன பீடங்களிலும் நிறைந்து இருக்கிறார்கள்.

தேசீயக் கொள்கைகளை உருவாக்கும் உரிமை காங்கிரஸ் ஸ்தாபனத்தில் இருப்பவர்களுடையது. அவைகளைக் கொண்டு செலுத்தி நாட்டின் நன்மையைக் காப்பதும் வளர்ச்சியை துரிதப்படுத்துவதும் பதவிகளில் உள்ள தோழர்களுடையது. திட்டங்களை நிறைவேற்ற வேண்டிய அதிகாரம் இவர்களிடம் இருக்கிறது.

பொதுமக்களின் ஆதரவு ஒன்றுதான் எந்த நிர்வாகத்திற்கும் அடிப்படையானதாகும். கட்சி அரசியலில் ஜனங்களுடைய மனச் சாட்சியின் பாதுகாவலர்களாக இருப்பவர்கள்—இருக்கவேண்டியவர்கள் அதிகாரத்தில் உள்ள கட்சியின் ஸ்தாபன அமைப்பை நடத்திவைப்பவர்கள். அவர்கள் பொதுமக்களுக்கு கொடுக்கும் உற்சாகத்திற்கும் நம்பிக்கைக்கும் சிறிதும் பங்கம் வராமல் பாதுகாக்க வேண்டிய அளவுக்கு செயல்புரியவேண்டிய பொறுப்பு அரசாங்கப் பதவியில் உள்ளவர்களுக்கு இருக்கிறது.

காங்கிரஸ் அரசாங்க நடைமுறையில் இந்த இரண்டு காரியங்களும் சரியாக நடைபெறவில்லை. நடைபெறச் செய்ய வேண்டுமென்ற எண்ணத்துடன் தான் சமீபத்தில் டில்லியில், மாகாண பிரதமர்கள், காங்கிரஸ் தலைவர்களின் கூட்டு மகாநாடு ஒன்று நடைபெற்றது. மனம் கலந்து பேசியு மிருக்கிறார்கள்.

காங்கிரஸ் ஸ்தாபனத்திடம் மக்களுக்கு நெருங்கியதொடர்பு இருந்தாலன்றி, காங்கிரஸ்காரர்களின் ராஜ்யபாரம் வெற்றிபெற முடியாது. ஆனால் நமது நாட்டில் காங்கிரஸ் ஸ்தாபனத்தில் உள்ளவர்கள் இன்று பொதுமக்களுடன் நெருங்கிப் பழகவில்லை. அதற்குப் பதில் அதிகாரத்தில் உள்ளவர்களுடன் தொடர்பு கொண்டு இருப்பவர்களைக் கவிழ்த்துவிட்டு தாங்கள் இடம் பிடிப்பதில்தான் கண்ணும் கருத்துமாயிருக்கிறார்கள்.

இதில் தனிப்பட்ட மனிதர்களின் பலாபலப் பரீட்சைதான் முதலிடம் பெறுகிறதேயல்லாது கொள்கை யடிப்படையில் போராட்டமோ அல்லது கூட்டுறவோ ஏற்படவில்லை.

ஒழுக்கம், தியாகம், தொண்டு என்ற வார்த்தைகள் வெறும் ஒலிக் குவியல்களாக ஆங்காங்கு மேடைகளில் அடிபடுவது தவிர இவற்றைப் பற்றிக் கவலைப்படுகிறவர்கள் மிகவும் அருமையாகவே காணப்படுகிறார்கள். உபசார வழக்காக இல்லாமல் கூறுவதானால் உயர் நோக்கம் என்பதொன்று இன்று இல்லவே இல்லை யென்றே கூறிவிடலாம்.

பொதுத் தேர்தல்கள் வரவிருக்கும் நிலையில் காங்கிரஸ்காரர்கள் இன்று மேடைகளில் பேசியும் எழுதியும் வரும் போக்கு தங்களை யாரும் எதிர்க்கக் கூடாது என்று முறைக்குப் பார்ப்பது போல இருக்கிறதேயல்லாமல் நாட்டு மக்களின் வேதனைக்குரலுக்கு மாற்று காணவேண்டுமென்ற அன்போ இரக்கமோ கடமை யுணர்ச்சியோ காணப்படவில்லை.

சென்னையிலும், ஐக்கிய மாகாணத்திலும் பதவியிலிருப்பவர்களிடையிலேயே பிளவுகள் தோன்றி பயங்கரமாக வளர்ந்து கொண்டிருக்கும்போது பரஸ்பரம் பேசிக்கொண்டோ அல்லது குறை கூறிக்கொண்டே காலம் தள்ளுகிறார்களே யல்லாது, நாட்டு நலம் என்னவாயிற்றுஎன்றுயாருக்கும் சிந்தனையேஇருப்பதாகத் தெரியவில்லை.

இவற்றிற்கெல்லாம் ஒரு காரணம் இருக்கிறது. காங்கிரஸ் தலைமைப் பீடத்தில் வீற்றிருப்பவர்கள் ஒளியிழந்து போயிருப்பதுதான். பட்டாபி சீதாராமையா காங்கிரஸ் தலைவராக இருக்கிறார் என்பது பத்திரிகைச் செய்திதான். அவருக்கு அடங்கி மாபெரும் இயக்கம் நடைபெறுவதாகவோ, அதன் சேவகர்களாக—அரசியல் பதவியில் இருப்பவர்கள், ஸ்தாபன அந்தஸ்தை மதித்து நடப்பதாகவோ தெரியவில்லை. கும்பமேளா உற்சவம்போல் வருடாந்திர காங்கிரஸ் மகாநாடுகள் ஆகிவிடலாமே தவிர உருப்படியான கொள்கைகளை அரசியலில் நடத்தி வைக்கும் குரல்வலிமை அதற்கு இனியும் இருந்துவருமா என்றே அஞ்சவேண்டிருக்கிறது.

காந்தியடிகள் மறைந்தபிறகு குளிர்விட்டது போன்ற ஒரு நிலைமை ஏற்பட்டுவிட்டது. தும்பறுந்த மாடு போன்ற நிலைமையில் இன்று காங்கிரஸ் இயங்குகிறது. அதை இழுத்துப்பிடித்து நாடெல்லாம் பணிந்து வந்து அதன் வழி நடக்கும்படியாகச் செய்யக்கூடிய தார்மீக பலமும் குரல் வலியும் படைத்தவர்கள் காங்கிரஸ் ஸ்தாபன அமைப்பில் தோன்றினாலன்றி தேசீய இயக்கம் தேய்ந்து கொண்டேதான் போகும்.

காங்கிரஸ் ஸ்தாபனத்தை முதலில் சீர்திருத்தியமைக்க—மக்களின் கவனத்தைக் கவரக்கூடிய தலைவர்கள் முன்வந்து வேலை செய்யவேண்டும். அத்தகைய வலிமையைக் காங்கிரஸ் பெறக்கூடிய அளவில் கொள்கைகளையும் திட்டங்களையும் காண்பதுடன் அவற்றை மக்களிடத்தில் பரப்பி பொதுஜன அபிப்ராயத்தை உருவாக்கத் தொண்டு உணர்ச்சி படைத்த தேசபக்தர்கள் படைதிரண்டு எழுந்தாக வேண்டும். முதலில் இப்போது செய்யவேண்டியது காங்கிரஸ் புதிய சூழ்நிலைகளுக்கேற்ப தனது வேலைத் திட்டத்தை நிர்ணயித்துக் கொள்வது ஒன்றுதான். அதுவரையில் நமது வேதனைகளைப் போக்கும் சக்தி உருவாகுமா என்பது சந்தேகம்தான்.

# ஆதியில் பாதி

"ஸ்ரீரா"

உள்ளே ரொம்பவியர்த்துக்கொட்டியது. ஆனாலும் அநியாயமான உக்ரம் தாங்கவில்லை. வீடோ கல்மண்டபம். சுகாதார முறையில் கட்டப்படும் இனிமையான வீட்டைப் பற்றிய கனவுகூட இத்தகைய "நெருக்கமான" சந்தர்ப்பங்களில் எழுவதில்லை!

மெதுவாக எழுந்து வாசலுக்கு வந்தேன். முன்னிரவு எட்டரை, ஒன்பது மணி இருக்கலாம். வாயிற் குறட்டில் நின்று ஆகாயத்தைப் பார்த்தேன். நீலத்துக் கிடையில் பிரகாசமான அம்மை வடுக்கள் போல் நட்சத்திரங்கள் மின்னிக்கொண்டிருந்தன. அம்மை வடுக்கள் என்று மனதில் எண்ணம் உதயமானவுடன் ஒரு குறை ஏற்பட்டது. வியாதி உணர்ச்சி பிடித்துக்கொண்டது. மெதுவாக அந்தக் கற்பனையை உதறி எறிந்தேன்.

தம்பியைக் கூப்பிட்டு பெஞ்சியை பிடித்துப் போட்டேன். படுக்கையும் கொணர்ந்து போடப்பட்டது. காற்று இலேசாக நகர ஆரம்பித்தது. "அப்பாடா, பரவாயில்லை" என்று முணுமுணுத்துக்கொண்டே சுருண்டு கிடந்த படுக்கையை விரித்து விடாமலேயே, சோம்பருடன் அதன் மேல் சாய்ந்தேன்.

மல்லாக்கப் படுத்திருந்த எனக்கு ஆகாயம்தான் கண்ணில் உறுத்திற்று. உள்ளம் உலக வாடையிலிருந்து விடுதலையடைய முக்கி முனகிக் கொண்டிருந்தது. நான் அதைத் தடை செய்யவில்லை.

அண்டாண்டங்களைப் பற்றிய நினைவும், ஸ்ரீமத் பாகவதத்தில் (நான்காவது ஸ்கந்தத்தில் என்று ஞாபகம்) அவை பற்றிய கதாரூபமான விவரணையும் சுழன்றெழுந்தன. அப்படியே கண்ணயர்ந்துவிட்டேன்.

தலையை யாரோ கடித்து இழுப்பது போல் இருந்தது. தலையில் மயிர் எங்கே வந்து அவ்வளவு நீளம் முளைத்ததோ தெரியவில்லை. எப்படியும் தலைமயிரை விடுவித்துக் கொள்ள முயற்சி செய்தேன்.

கல கலவென்று யாரோ சிரித்தார்கள். அது அமானுஷீகமான சிரிப்புதான். நிச்சயமாகத் தெரிந்தது. திரும்பிப் பார்த்தேன். அயர்ந்து போகவில்லை.

கழுதை முகமும் மனித உடலும் கொண்ட இனிய பிராணி—மனிதர் ஒருவர் நின்று என் அளகபாரத்தை சுவைத்துக் கொண்டிருந்தார்.

"ஏது இவ்வளவு தூரம்" என்று கேட்டேன். அவர் ரொம்பப் பழகிப் போனவர் என்ற ஞாபகம். உண்மையில் புதியவராகத் தோன்றவில்லை.

"உமது வீட்டைத் தேடிக் கண்டு பிடிப்பதற்குள் பெரும் பாடாகி விட்டது, போம்" என்றார் அந்த கர்த்தப மனிதர்.

"ஆயிரக் கணக்கில் மனிதர்கள் வசிக்கும் ஊரில் என்னைத் தேடிக் கண்டுபிடித்துக் கொடுக்க என்ன வரம் வைத்திருக்கிறீரா?" என்று கேட்டேன்.

"கேட்டவுடன் வரம் கொடுக்கும் கடவுள் நானில்லை. அந்தக் கடவுள் மனிதனது கற்பனையில் உருவாகி அவனையே நாசம் செய்து கொண்டிருக்கிறார். ஹிட்லரும், சர்ச்சிலும் ஒரேசமயத்தில் சண்டையில் வெற்றி கிடைக்கவேண்டும் என்று வேண்டும் கடவுள் அல்ல நான். மனிதனது ஒழுக்கம், கற்பு, சட்டம், வழக்கம் இவை போன்ற நீசமான நீதிகளுக்குக் கட்டுப்பட்ட கடவுளல்ல நான்" என்று பொறிந்து தள்ளினார்.

அவர் என்ன சொல்கிறார் என்றே புரியவில்லை. அவர் செய்துகொண்டிருந்த காரியத்துக்கும், அவரது வேதாந்தத்துக்கும் ஏதும் சம்பந்தமிருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. என் தலையில் பாதி மயிர் காலியாகியிருந்தது.

"தலை மயிரை உமது முக விலாசத்திலிருந்து விடுவித்து விட்டு இப்படி உட்கார்ந்து பேசும்" என்றேன்.

"உட்கார்ந்து பேசுவதற்கு என்ன இருக்கிறது?" என்றார்.

(அடுத்த பக்கம் பார்க்க)

(முன் பக்கத் தொடர்ச்சி)

"பின் எதற்காக இங்கு வந்தீர்?" என்று கேட்டேன்.

"வேலையற்று அலேயும் உமக்கு ஒரு வேலே கொடுக்கலாம் என்று தான்" என்றார்.

"அப்படியென்றால்?"

"ஆறு கால் ஆடு, இரண்டு தலே யுள்ள குழந்தை, ஒரு காது இல்லாத யானை, என்றெல்லாம் எக்ஸிபிஷன் களில் காலணு, அரையணு டிக்கட் வைத்துப் பழி வாங்குகிறார்களே. ஏன் நீரும் இந்த ரகத்தில் ஒரு தொழில் ஆரம்பிக்கக் கூடாது?" என்று கேட்டார்.

"செய்யலாம். அதற்கேற்ற பொருளைத் தேடிச் சேர்க்கும் உத்வேகம் எனக்கில்லேயே!"

"நான்தான் நேரே வந்து தொலைந்திருக்கிறேனே" என்றார்.

நான் இப்போதுதான் அயர்ந்து போனேன். ஒருகணம் சும்மா இருந்தேன். அப்புறம் வேறொன்றும் வாய்விட்டுப் பேசாமல் "சரி, கிளம்பும்" என்று கொண்டே வேகமாக எழுந்திருந்தேன்,

நேரே எங்கோ சென்றேன். எந்த வழியாக என்று தெரியவில்லை கடைசியில் பிரகாசமான ஒரு இடத்துக்கு வந்து சேர்ந்தேன். ஆமாம், அது ஒரு எக்ஸிபிஷன் தான்!

"சாற்பத்தி ஐந்து" என்று எண்ணிக்கையிருந்த கூடாரத்துக்குள் நுழைந்தேன். அங்கே ஒருவரையும் காணோம். வாசலில் 'கர்த்தப மனிதன்' என்று போர்டு போட்டிருந்தது. கீழே 'கட்டணம் காலணு தான்' என்றும் போட்டிருந்தது.

நானும் அந்த அப்பாவி அரைக் கடவுளும் அங்கே வந்து வியாபாரம் செய்வதை எதிர்பார்த்து யாரோ இப்படியெல்லாம் தயாராக வைத்திருந்தார்கள் என்ற எண்ணம் தோன்றவில்லை.

கர்த்தப அரசரை உள்ளே சென்று இருக்கச் சொல்லிவிட்டு நான் வாயிலில் வந்து உட்கார்ந்துகொண்டேன், பக்கத்தில் டமாரக்காரன் கூச்சல் போட்டுக் கொண்டு உட்கார்ந்து கொண்டிருந்தான். வேறென்ன! என் காட்சிசாலே விளம்பரம்தான்.

ரோல்டு கோல்டு பிரேம் கண்ணுடிக்காரர் ஒருவர் தமது மூன்று குழந்தைகளுடன் என்னை நோக்கி வந்தார்.

"இது நிஜமா!" என்று கேட்டார்.

"எது நிஜமா!" என்றுகேட்டேன்.

"நீர் உள்ளே வைத்திருக்கும் பொருள் நிஜமா" என்று கேட்டார்.

ரொம்பச் சிக்கலான கேள்வி. பதில் சொல்லத் தெரியவில்லை.

"வாரும், இரண்டு பேருமாய்ப் போய்ப் பார்ப்போம்" என்றேன். நுழைந்தோம்.

"வாருங்கள்" என்றார் கர்த்தப அரசர். ரோல்டு கோல்டு கண்ணுடிக்குத் தூக்கி வாரிப்போட்டது. அயர்ந்துபோய் நின்றார்.

"பயப்படாதேயும். இப்படி அருகில் வந்து உட்காரும்" என்றார் கர்த்தப அரசர்.

அந்த புது ஆசாமி மெதுவாக வந்து உட்கார்ந்தார், கர்த்தப அரசரது தலேயை உன்னிப்பாய்ப் பார்த்தார். கண்கொட்டவே யில்லை. கூட வந்த சிறிசுகள் நடுங்கிப் போய் நின்றன.

கோபித்துக்கொள்ளக் கூடாது. இந்தக் கழுதைத்தலேக்குள் மனிதன் நின்று பேசவில்லேயே?', என்று கேட்டார் மிஸ்டர் ரோல்டு கோல்டு.

"கண்ணுடியை எடுத்து விட்டு நோக்கப்பாரும். நான் இந்த லோகத் துப்புரளிக் கூட்டத்தைச் சேர்ந்தவனல்ல. என் போன்ற ஒரு ஜன்மம் இந்த உலகத்தில் வாழ வந்தால் அதற்கு நீங்கள் கொடுக்கும் வரவேற்பு வெறும் வியப்புத்தானு, மனிதனது பரிணும வேதனைகளில் ஒரு மகோன்னதமான மேல்படியைத் தான் என் அவதாரம் குறிக்கிறது. எனக்கு உணவு தலேமயிர். மனிதன் சோற்றுக்கும் துணிக்கும் மாரடித்துத்துயரப்படும் வேளையில் எனக்கு தலேமயிர் சுலபமாகக் கிடைத்து விடுகிறது. ஆனால் ஆத்மாவிற்குத் தான் எவ்வித திருப்தியையும் காணேம். என்னை வேடிக்கைப் பொருளாக நீர் காணவந்திருக்கிறீர். நான் எக்சிபிஷனில் இவருக்கு வியாபாரம்செய்துகொடுக்கவந்தேன். ரஸமாகப்பேசிக் கொண்டிருப்பதற்கு ஒருவரும் அகப்படவில்லை. நீர் என்னைக் கண்டு வியந்து வாயைப் பிளக்கிறீர். என்னிடம் என்ன வியப்பை நீர்கண்டுவிட்டீர்? இந்த மனிதர்களே இப்படித்தான். தப்பித்தவறி உலகறிய பகலில் நான்வெளியில் நடமாடினுல் என்னை மியூசியத்தில் பிடித்து வைத்து காட்சிப்பொருளாக்கி விடுவார்கள். நீர் என்னுடன் சமதையாக உட்கார்ந்து பேச ஏன் கூச்சப் படுகிறீர்?" என்று கேட்டு முடித்தார் கர்த்தப அரசர்.

ரோல்டு கோல்டு கண்ணுடி மென்று விழுங்கியது. மெதுவாக எழுந்து நகர ஆரம்பித்தது குழந்தைகளும் அப்பாவைப் பின்பற்றி நகர்ந்தன. நான் மாத்திரம் உட்கார்ந்திருந்தேன்.

"ஆமாம், அவரிடம் டிக்கட் சார்ஜ் வசூல் பண்ணினீரா?" என்று கேட்டார் கர்த்தபர்.

"ஐயையோ மறந்து விட்டேனே!" என்று சொல்லிக்கொண்டே எழுந்தேன்.

கர்த்தப அரசர் என் கைப் பிடித்து உட்கார வைத்தார். "உமக்கும் காசுக்கும்இருக்கும் பொருத்தம்இது தான். நானும் நீரும் சேர்ந்து செய்யும் வியாபாரம் எல்லாம் இப்படித் தான் இருக்கும். என்னை இவ்வளவு நேரம் இங்கே உட்கார வைத்தது தான் கண்ட மிச்சம் எழுந்திரும்,போகலாம்" என்றார்.

எழுந்திருந்தார்—பார்த்தேன். அப்புறம் காணவில்லை. தலேயை நீட்டிக் கொண்டு சுற்றுமுற்றும் பார்த்தேன். தடாரென்று ஏதோ தடுக்கிக் கீழே விழுந்தேன்.

ஃ ஃ ஃ

தூக்கம் முழித்துப் போய்விட்டது. பைத்தியக்காரக் கனவு என்னை இப்படிக் கீழே சாய்த்திருந்தது. சுற்றுமுற்றும் பார்த்தேன். ஒருவரும் இல்லை. கீழே விழுந்த அவமானம் ஒருவருக்கும் தெரியாது.

எழுந்து பெஞ்சியில் உட்கார்ந்தேன். விண்ணில் மேலாப்பு விரித்திருந்த அந்தப் பரந்த மோன வெளியில் மீன்கள் மின்னிக் கொண்டிருந்தன.

ஹயக்ரீவரும், கணபதியும் மாறி மாறி மனக்கண் முன் வந்தார்கள். கர்த்தப ராஜரைப் பற்றி எனக்கு வியப்பொன்றும் தோன்றவில்லை. வழக்கத்தின் சுமை என்னை அழுத்தவில்லை. கர்த்தபராஜர் ஒரு நாள் இல்லேயென்றால் இன்னொரு நாள் கட்டாயம் தோன்றுவர் என்ற உறுதி மனத்தின் மூலேயில் எழுந்தது.

இறக்கையடித்துப் பறக்கும் சிங்கத்தின் முதுகேறி வியனுலகங்களெல்லாம் யாத்திரை செய்ய வேண்டுமென்ற உணர்ச்சி ஏற்பட்டது.

ஸ்ரீமத் பாகவதத்தின் கற்பனைத் தரம் மனதைக் குமைத்துக் குதுகலப் படுத்தியது. அதன் உள்ளர்த்தரங்கம் தெரியாத மனிதப் பூண்டுகளை எண்ணி விசாரம் தோன்றிற்று.

கர்த்தப ராஜரைஎதிர் பார்த்துநிதமும் காத்திருக்கிறேன். என்றோ ஒரு நாள் அவரைக் காணமுடியும் என்ற நம்பிக்கை உள்ளத்தில் வாடா மலராக ஆடிக்கொண்டிருக்கிறது.



அமெரிக்கக் கல்லூரி ஒன்றின் உபயோகத்திற்காகப் பிரிட்டனில் தயாரிக்கப் பட்டுச் செல்லும் குளோப், "பூமி உருண்டை" மூன்றடி உயரமும் முக்கால் டன் எடையுமுள்ள இதன் விலை ரூ. 13,330.

## " ஆராய்ச்சிமணி "
## ஆரம்ப விழா

30-4-50 மாலை 5-30 மணிக்கு திருச்சி டவுன் ஹாலில் நகர காங்கிரஸ் அட்ஹாக் கமிட்டி கன்வீனர் திரு. P. சங்கிலியா பிள்ளை தலைமையில் ஆராய்ச்சி மணி (மாதமிருமுறை)யின் ஆரம்பவிழா நடைபெற்றது. ஆசிரியர் K.K. சாமி வரவேற்று சொற்பொழிவாற்றினர்.

இணை ஆசிரியர் R. P. கருப்பணன் கவிஞரை அறிமுகம் செய்தார். காந்திதாசன் கவிஞர் செ. சிவகருப்பையா பாடல்கள் பாடி வாழ்த்துக் கவிதை வழங்கினர். நிர்வாக ஆசிரியர் M. S. வெங்கடாசலம் ஆசிச்செய்திகளை வாசித்தார். சொற்பொழிவாற்றியவர்கள் :— திருவாளர்கள் சுல்தான் பக்தாதி ஆசிரியர்: சமரசம், தி. மா. இராமலிங்கம், வை. பாலசுப்ரமணியம், M. R. S. மணி, ஆசிரியர் "மின்னல்" P. R. ராமசாமி (சோஷலிஸ்ட் கட்சி, ப. சுப்பராயன், ஸ்ரீரங்கம் நகரசபை ஆணையாளர், N. ஹலாஸ்யம், B. A., B. L. கி. ஆ. பெ. விசுவநாதம் ஆசிரியர் "தமிழ் நாடு" அக்னிதத் சீனிச்சாமி, சங்கர், ராஜன், கிருஷ்ணமூர்த்தி திருமதி இர. நீலலோசனி, திருச்சி ஜில்லா உதவி சாரணக் கமிஷனர்.

பல பத்திரிகாசிரியர்களிடமிருந்து ஆசிச்செய்திகள் வந்ததும்,தமிழ் கலாநிலையத்தாரால் ஆசிரியர்களுக்கு தேநீர் விருந்தளித்ததும் குறிப்பிடத்தக்கது.

தலைவர் முடிவுரையின்பின் இணை ஆசிரியர் சுப்பையாவால் நன்றிகூற கூட்டம் இனிது கலேந்தது.

## தமிழ் உலகம்

தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் சார்பில் இவ்வாண்டு தமிழ்த் திருநாள் கோவை அரசினர் கல்லூரியில் 20, 21 தேதிகளில் நடைபெறுகிறது.

கோவையிலேயே 27, 28 தேதிகளில் ஆர். எஸ். புரம் உயர்நிலைப் பள்ளியில் முத்தமிழ் வாரசி மகாநாடு கவியரசர் பாரதிதாசன் தலைமையில் நடைபெறுகிறது.

19-5-50ல் திருச்சியில் முத்தமிழ்ச்சங்கம் தொ. மு. பாஸ்கரத்தொண்டைமான் அவர்கள் தலைமையில் திறக்கப்படுகிறது.

# உலகக்களம்

"சம்மட்டி"

- லியாகத் அலிகானின் இஸ்லாமிஸ்தான்!
- புதிய மந்திரி சபை.
- 'ஜனதா'வின் ஜனத் துரோகம்.

நேரு—லியாகத் அலி ஒப்பந்தப்படி, இரு நாடுகளும் அமைதியான — சுபிட்சமான பாதையில் முன்னேறிப் பலம் பெற்று ஆசிய நாட்டின் அரணாக இருக்க வேண்டுமென்பது என் இதய பூர்வமான அவா. அதற்கான சுமுகமான சூழ்நிலையை ஏற்படுத்துவது தான் நம்முடைய தேசியக் கடமையாகும். இந்த உணர்ச்சியில் நான் இதை எழுதுகிறேன். பாகிஸ்தான் பிரதமர் இன்று அமெரிக்காவில் சுற்றுப் பிரயாணம் செய்கிறார். பல பிரசங்கங்களைச் செய்துவிட்டார். தன்னாட்டின் தேவைகளையும் — கொள்கைகளையும் அவர் விளக்கிக் கொண்டே போகிறார். அவர் வெளியிடும் சில கருத்துக்களை நான் நிர்மாண திருஷ்டியில் விமர்சனம் செய்ய விரும்புகிறேன். என் உணர்ச்சியின் சரியான மனத்தைப்புரிந்து கொள்ள வேண்டுமென்று நான் வாசகர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இந்தியா—பாகிஸ்தான் ஒப்பந்தத்தின் காரண பூதமான இருவர்களில் ஒருவரான லியாகத் அலிகான், இன்னமும் இந்தியாவுக்கு எதிராக மறைமுகமாக அமெரிக்காவில் பேரம் பேசுகிறார் என்பதையே அவருடைய போக்கு எடுத்துக்காட்டுகிறது. பரஸ்பரம் பேசி, தங்களுடைய தகராறுகளையும், பிரச்னைகளையும் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்று வானளாவப் பேசிய லியாகத் அலிகான், இப்போது அமெரிக்காவில் சர்வதேசத் தலையீட்டை விரும்பி அழைக்கிறார்! மைனாரிடி சம்பந்தமாக ஏற்பட்டுள்ள இந்தியா—பாகிஸ்தான் ஒப்பந்தம்–இனி எல்லா விஷயங்களிலும் இந்தியாவும் — பாகிஸ்தானும் கூட்டுக் கொள்கையை வகுத்துப்பின் பற்றும் ஒரு நல்ல உறவைச் சிருஷ்டிக்க உதவி செய்யும் என்று சமீபத்தில் பண்டித நேரு டெல்லியில் பேசியதற்கும், பாகிஸ்தான் பிரதமர் அமெரிக்காவில் பேசியதற்கும் உள்ள வித்தியாசத்தைப் பாருங்கள். பாகிஸ்தான் பிரதமரின் மனோபாவம் மாறிவிட்டது என்று நினைக்க அவருடைய அமெரிக்கப்பேச்சு இடம் கொடுக்கிறதா என்பதை நீங்களே முடிவுசெய்துகொள்ளுங்கள்.

டெல்லி ஒப்பந்தம் ஏற்பட்டவுடனேயே, பாகிஸ்தான் பிரதமர் தனது எல்லைகளுக்கு உத்திரவாதம் அளிக்க வேண்டுமென்று பிரிட்டனிடம் கோரிக்கை விடுத்தார் என்பதை இச் சந்தர்ப்பத்தில் நாம் ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். உடனடியான லாபங்களைத்தான் பாகிஸ்தான் பிரதமர் விரும்புகிறாரே யொழிய நீண்ட நாளைய உறவுக்கான ஏற்பாடுகளைப் பற்றி அவர் "மனப்பூர்வமாகச் சிந்திக்கத் தயாராயில்லை என்று நாம் நினைப்பதில் என்ன தவறு இருக்க முடியும். அடிப்படையான மதிப்புகளை வலியுறுத்தி, அதன்படி நாம் ஒழுக வேண்டும் என்று பண்டித நேரு விரும்புவதற்கும், லியாகத் அலிகானின் 'லட்சிய'த்திற்கும் இடையே எவ்வளவு ஆழமான வேறுபாடு இருக்கிறது என்பதைப் பாருங்கள்.

ஆனால், பாகிஸ்தான், நேருவின் உன்னத விருப்பத்தை—நியாய அடிப்படையை பாராட்டத் தயாராயில்லை. அதற்குப் பதிலாக, இன்னமும் பாகிஸ்தான் காமன் வெல்தில் இருப்பது லாபமா அல்லது வெளியேறுவது லாபமா என்றும், மாஸ்கோ போவதில் லாபமா அல்லது அமெரிக்கா போவதில் லாபமா என்றும். இஸ்லாமிஸ்தான் என்ற இஸ்லாமிய நாடுகளின் மகா சமஷ்டியை மத அடிப்படையில் ஏற்படுத்துவதில் லாபமா என்றும் பாகிஸ்தான் பேரம் செய்யும் போக்கில்–உடனடியான தன்னுடைய ராஜீய பேராசைகளைப் பூர்த்தி செய்யும் போக்கில் போய்க்கொண்டிருக்கிறது என்பதையே நாம் காணுகிறோம். அவருடைய இஸ்லாமிஸ்தான் பற்றி அரபு நாடுகளோ அல்லது அந்நாடுகளுக்குப் பின்னணியில் இருக்கும் வல்லரசுகளோ கவலைப்படவில்லை. ஆனால், பாகிஸ்தான் மட்டும் இஸ்லாமிஸ்தான் பற்றி பிரமாதமாகக் கவலைப்படுகிறது!

'மதப்படை ஆட்சித் தத்துவத்தில் எங்களுக்கு வெறியில்லை' என்று சொல்லிக் கொள்ளும் பாகிஸ்தான் பிரதமர்—இஸ்லாமிய நாடுகள் ஒரு மகா சமஷ்டியாக இணைய வேண்டிய 'அவசியம்' ஏற்பட்டு விட்டதாகச் சொல்வதில்–'மதவெறி' இல்லை போலும்!

●

அப்பாடா! நேரு புதிய மந்திரி சபை அமைத்துவிட்டார்! உதவாக்கரை 'தௌலத்ராமும்', வகுப்புவாதி 'முகர்ஜியும்', சாமர்த்தியமில்லாத 'நியோகியும்', டாடா வாடையுள்ள 'மத்தாயும்' வெளியேறுகிறார்கள் என்பதில் எவ்வளவு மன அமைதி ஏற்படுகிறது!... முகர்ஜியும்—நியோகியும் ராஜிநாமா செய்துவிட்டு வெளியேறிவிட்டார்கள்! தௌலத்ராம்–மத்தாய் புதிய மந்திரி சபையில் இடம்பெற்றிருப்பது போல, ஜாபிதாவில் காண்கிறது! ஆனால், அவர்கள் வேறு ஏற்பாடு செய்யப்படும் வரையில்தான் பதவி வகிப்பார்கள். புதிய மந்திரி சபையில் திறமைசாலிகளான **முன்ஷ—மெஹதாப்** இடம்பெற்றிருக்கிறார்கள். **ராஜாஜியும்** அழைக்கப்பட்டிருக்கிறார். அவரும் சேரவேண்டும் என்பதே நம்முடைய அவா. அவரைப் போன்ற கவர்னர்–ஜெனரல் பதவி வகித்தவர்களோ அல்லது பின்னால் ஜனாதிபதி பதவி வகித்தவர்களோ மந்திரி போன்ற பதவிகளை ஏற்றுக்கொள்ளக்கூடாது. என்ற சம்பிரதாயத்தையோ அல்லது அரசியல் விதியையோ, சர்க்கார் மாற்றிவிட வேண்டும். நமக்கு மேதைகள்–திறமைசாலிகள்–ஒழுக்கமானவர்கள் தேவை. அவர்களின் ஞானத்தை நாம் இழக்கமுடியாது. நேரு—சர்தார்—ராஜாஜி—இம்மும் மூர்த்திகள் இந்த நாட்டின் தரத்தை—வளத்தை உயர்த்தவே பிறந்திருக்கிறார்கள். இது நம்முடைய பெரிய பாக்கியமாகும் என்பதை நாம் உணரவேண்டும்.

●

டெல்லியிலிருந்து வெளிவரும் சோஷலிஸ்டு கட்சியின் ஆங்கில வார இதழான 'ஜனதா', பயங்கரமான—துரோகமான பொய்ச் செய்தியைப் பிரசுரித்திருந்தது, அதற்கு மிக மரியாதையுடன் பண்டித நேரு கண்டனப்பதில் விடுத்திருந்ததை மட்டும் வாசகர்கள் படித்திருந்திருப்பார்கள். அந்தப் பிரஸ்தாபப் பத்திரிகை என்னதான் எழுதியிருந்தது என்று நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். பண்டித நேருவின் கண்டனப் பதிலிலிருந்து கூட 'ஜனதா'வின் விஷமச் செய்தியின் பூரா விவரத்தையும் நாம் தெரிந்துகொள்ளமுடியவில்லை. எனவே நான் பிரஸ்தாபப்பத்திரிகையின் பிரஸ்தாப இதழைப்படித்துப் பார்த்தேன். நேருவுடன் பேச்சுவார்த்தை நடத்த டெல்லிக்கு பாகிஸ்தான் பிரதமர் லியாகத் அலிகான் வந்தவுடன் அவரைக் காவலில் வைத்து விடவேண்டுமென்று சர்தார் திட்டமிட்டதாயும், அப்படிப்பட்ட செய்கை சர்வதேச சட்டத்திற்கு விரோதமானது என்று சொல்லி பண்டித நேரு சர்தாரின் யோசனையைத் தீவிரமாக எதிர்த்தாரென்றும் 'ஜனதா' என்ற அந்தப் பத்திரிகை துரோக எண்ணத்துடன் சரடு திரித்திருக்கிறது. இதுதான் மக்களுக்காக 'உண்மை'யாகப் பேசும் மக்களின் பத்திரிகையின் யோக்கியதை! ஒப்பந்தம் சரியாக அமுல் செய்யப்பட வேண்டுமென்ற உணர்ச்சித் தீவிரத்திலும், பிரதமருடன் தோளோடு தோளொட்டிப் போகவேண்டும் என்ற உத்சாகத்திலும் இன்று நமது சர்தார் முன்னணியில் நிற்கும் ஒரு மாபெரும் வீரராகத் திகழ்கிறார். சர்தாருக்கும் பண்டித நேருவுக்கும் அபிப்பிராய பேதமிருப்பதாக 'ஜனதா' தொடர்ந்து எழுதுவதின் மர்மம் என்ன என்று கேட்கிறீர்கள்! எல்லாம் அவர்களிடை சண்டை வரவேண்டும் என்பதற்காக 'கோயபல்ஸ்' வழியில் பிரசாரப் பிரார்த்தனை செய்கிறார்கள். இந்த ஜனதா வின் நேதாக்கள்! இதுதான் மர்மம்! இந்தக் கேவலச் செய்கையைச் செய்யும் இந்தக் கூட்டம் தாங்கள் கூச்சலிடும் மக்களுக்காக பெரிய துரோகம் செய்கிறார்கள் என்பதைத்தான் நாம் உணரவேண்டும். வகுப்பு சௌஜன்யம் காப்பாற்றப்படவேண்டும் என்று சொல்லும் இந்தத் தலைவர்களின் பத்திரிகையான 'ஜனதா'

'டெல்லி வந்தவுடன் லியாகத் அலிகானை காவலில் வைத்துவிட சர்தார் திட்டமிட்டதாக' எழுதியிருப்பதால், வகுப்பு சமரஸம் ஏற்படுமா? அல்லது வகுப்புத்துவேஷமும், கலகங்களும் அதிகரிக்குமா?... நீங்களே யோசித்துக்கொள்ளுங்கள்!... இம்மாதிரியான விஷத்தைக் கக்கும் பத்திரிகைகளை நேரு சர்க்கார் அனுமதித்திருப்பதால்தான், இந்த ஜன விரோதிகள் சிவில் உரிமைகளைப் பற்றிப் பேசுகிறார்கள்!

●



## மின்சார கோளாறுகளை கண்டுபிடிக்கும் சாதனம்!

மோட்டார்கார்கள், லோரிகள், மோட்டார் – சைகிள்கள் முதலியவைகளில் மின்சாரம் சம்பந்தமாக ஏற்படும் கோளாறுகள் உடனடியாகக் கண்டுபிடித்துக் காட்டக் கூடிய புரட்சிகரமான சாதன மொன்றை லண்டன் தொழிற் ஸ்தாபனமொன்று உற்பத்தி செய்து வருகிறது. மிகச்சிறியதும், சுலபமாக இயக்கக் கூடியதுமான இச்சாதனம் மிகச் சாதாரணமான சில சோதனைகளின் மூலம் ஒரு சில வினாடிகளில் மின்சாரக் கோளாறுகளை கண்டுபிடித்து விடுகிறது. இச்சாதனத்தைக் கொண்டு "வோல்டேஜை" சோதிக்கலாம்; "ஷார்ட்-சர்கூட்" ஏற்படுகிறதாவென்பதை கண்டுபிடித்துவிடலாம். இச்சாதனம் முக்கியமாக மோட்டார் கார், மோட்டார்-சைகிள் ஆகியவற்றின் உபயோகத்திற்கென்றே தயாரிக்கப்பட்டுள்ள தென்றாலும் மின்சார ஸ்திரிபெட்டி, மின்சார துடைப்பான்கள் போன்ற இதர சாதனங்களை சோதிப்பதற்கும் பயன்படும். பெட்டிக்குள் வைத்து விற்கப்படும் இச்சாதனத்தின் நிறை சுமார் ஒன்பது ராத்தல்களாகும். இது சாதாரணமாக 100-250 வோல்ட்டுகளில் வேலைசெய்கிறது.

## பாட்டரியினால் இயங்கும் 'டிரக்'!

பாட்டரியினால் இயங்கும் புதுவித மோட்டார் டிரக் ஒன்று வரும் 8௨ யன்று ஆரம்பமாகும் பிரிட்டிஷ் கைத்தொழில் சந்தையில் பர்மிங்ஹாம் பிரிவில் முதல் முதலாக வர்த்தகர்களுக்கு காட்டப்படும். இதற்கு "ஸ்டகாடிரக்" எனப் பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. இந்த டிரக் மனதை வசீகரிக்கக் கூடிய ரீதியில் உருவம் பெற்றிருக்கிறது. அத்துடன் இயந்திரங்கள் திறமையாக இயங்கும் விஷயத்திலும், நீண்ட நேரம் வேலை செய்யக்கூடிய மிகச் சக்தி வாய்ந்த பாட்டரிகளை அமைப்பதிலும் கம்பெனியார் அதிக கவனம் செலுத்தியுள்ளனர்.

## மீண்டும் மொழி அடிமைத் தனமா?

(4ம் பக்கத் தொடர்ச்சி)

தியின் ஏகாதிபத்தியம் கொடுமையுமையுடன் ஆட்சி செலுத்தத்தொடங்கியிருக்கிறது.

ஏதோ ஆங்கிலேயர்களாவது, "இண்டியன் இங்கிலீஷ்" என்று தங்களுக்குள் சிரித்துவிட்டு, ஏதோ காரியம் நடந்தால் சரி என்று இருந்தார்கள். ஆனால் ஹிந்தி ஏகாதிபத்தியவாதிகளோ ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் மற்ற பாஷைக்காரர்களை மட்டந்தட்டவும் அதைக்காரணமாகக் கொண்டு கீழே அமுக்கி வைக்கவும் பார்க்கிறார்கள். இந்த நிலைமை கொஞ்சமும் நல்லதல்ல: நியாமும் அல்ல.

ஃ ஃ ஃ

தாய் மொழியையன்றி வேறு மொழியின் உதவி நமக்கு அவசியம் என்று ஏற்படும் பட்சத்தில், ஹிந்தியைக் காட்டிலும் ஆங்கிலத்தையே நாம் ஒப்புக்கொள்ளலாம். ஆங்கிலத்தை ஒப்புக்கொள்வதில் பலன் அதிகம் உண்டு. காலேஜு வகுப்புகளில் தமிழ்மொழியில் பாடங்கள் கற்பிப்பதற்குக் காலம் வரும் வரையில் ஆங்கிலத்தில் கற்பிப்பதே உண்மையில் பயனுள்ளதாகும்.

ஹிந்தி பாஷையை வளர்ப்பதற்கென்று இன்றைக்கு ஆரம்பித்துப் பெரும் பிரயத்தனம் செய்தால் ஒருவேளை இன்னும் நூறு வருஷங்களில் ஆங்கில பாஷைக்கு நிகரான அறிவுச் செல்வங்களையும் இலக்கியச் செல்வங்களையும் உண்டாக்கலாம். ஆனால் அதற்குள்ளே ஆங்கில பாஷை இன்னும் எவ்வளவு முன்னேற்றம் அடைந்திருக்குமோ தெரியாது!

நம்முடைய காலேஜுகளில் ஆங்கில மொழியை அகற்றிவிட்டுத் தமிழைக் கொண்டு வருவதென்றால் தாய்மொழி அபிமானங் காரணமாக அதை நாம் ஒப்புக்கொள்ளலாம். தமிழை வளர்ப்பதற்கு அது ஒரு சாதனமாகும் என்று எண்ணித் திருப்தியடையலாம்.

ஆனால் ஆங்கிலத்தை நீங்கிவிட்டு அதற்குப் பதிலாக ஹிந்தியை உபயோகிப்பது என்பது முழு மடமையாகும்.

ஃ ஃ ஃ

தேசிய பாஷை எந்தெந்தக் காரியத்துக்கு அவசியமோ அந்தக் காரியங்களுக்கு மட்டுமே அதை வைத்துக் கொள்வோம். அரசியல் வாழ்க்கையில் ஈடுபடுவதற்கு ஹிந்தி தெரிந்திருக்க வேண்டும். இந்திய சர்க்காரில் உத்தியோகம் பார்ப்பதற்கு ஹிந்தி தெரிந்திருக்க வேண்டும். வியாபாரிகளுக்கும் யாத்திரீகர்களுக்கும் ஹிந்தி தெரிந்திருக்க வேண்டும். சில சமயம் வரும் ஹிந்தி சினிமாக்களைப் பார்ப்பதற்கும் ஹிந்தி தெரிந்திருக்கலாம். இதற்கெல்லாம் தெரிந்திருக்க வேண்டிய ஹிந்தி மிகவும் சொற்பம்.

ஃ ஃ ஃ

ஹிந்தி பாஷைக்காரர்கள் அந்தப் பாஷையின் ஏகாதிபத்தியத்தை ஸ்தாபிக்க விரும்புகிறார்கள் என்று நாம் சொல்லுவது விளையாட்டல்ல; வெறும் பயமுறுத்தலும் அல்ல. வடநாட்டு அரசியல் வாதிகள்-ஹிந்தி பண்டிதர்களுக்கிடையே இத்தகைய ஏகாதிபத்திய வெறி வளர்ந்து வருகிறதென்பதற்குப் பல அறிகுறிகள் காணப்பட்டு வருகின்றது. வடநாட்டுக்குச் சென்று வரும் தமிழ் நாட்டுப் பிரதிநிதிகள் பலரும், வடநாட்டில் வாழ்க்கை நடத்தி வரும் தமிழர்கள் பலரும் ஏற்கெனவே இதைப்பற்றிப் புகார் செய்து வந்திருக்கிறார்கள்.

அதற்கெல்லாம் சிகரம் வைத்தது போல, "காலேஜுகளில் ஹிந்தி மூலம் பாடம் போதிக்க வேண்டும்" என்ற யோசனை வெளியாகியிருக்கிறது.

எனவே, ஹிந்தி பாஷையின் ஏகாதிபத்தியத்தை ஸ்தாபிக்கும் முயற்சி வெறும் பூச்சாண்டி அல்ல. நமக்கு ஏற்பட்டுள்ள உண்மையான அபாயம் என்றே முடிவு கட்டவேண்டியிருக்கிறது.

தமிழ் நாட்டில் ஒரு கூட்டத்தார் சில காலத்துக்கு முன்பு "ஹிந்தி ஒழிக!" என்ற கூச்சலைக் கிளப்பினார்கள். இந்தக் குறுகிய துவேஷ மனப்பான்மை கொண்ட கூச்சலைத் தமிழ்ப் பெருமக்கள் எதிர்த்து ஒழித்துக் கட்டினார்கள்.

அது போலவே ஹிந்தி பாஷையின் ஏகாதிபத்தியத்தை ஸ்தாபிக்கும் முயற்சியையும் தமிழ் பெருமக்கள் எதிர்த்து ஒழிப்பார்கள் என்பதில் ஐயமில்லை.

# பிரிட்டனில் யுத்த பிற்கால பொருளாதார நிலைமை

பிரிட்டனின் இன்றைய பொருளாதார நிலையை ஆராய்வதற்கு இது ஒரு சீரிய தருணமாகும். ஏனெனில் அண்மையில்தான் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் பட்ஜெட்மீது விரிவான விவாதங்கள் நடைபெற்றுள்ளன; இதன் பலனாக ஏகப்பட்ட புள்ளி விவர உண்மைகள் நமக்கு கிடைத்துள்ளன. அடுத்தபடியாக பிரிட்டனின் வருடாந்திர பொருளாதார சர்வே அறிக்கையும் நம்முடைய ஆராச்சிக்கு அதிகம் உதவும்; மூன்றாவதாக 1949 வருட வெளிநாட்டு வர்த்தகம் பற்றிய பூரா புள்ளி விவரங்களும் அடங்கிய வெள்ளை அறிக்கையொன்று வெளியாயிருக்கிறது; தேசிய வருமானம், செலவினம், கடந்த நான்கு வருடங்களில் உள்நாட்டு பொருளாதாரத்தில் ஏற்பட்டு வரும் மாற்றம் ஆகியவைபற்றி விவரங்களுடன் பிரசுரிக்கப்பட்டுள்ள வெள்ளை அறிக்கையும் நமது ஆராய்வுக்கு அதிகம் உதவும்.

1947 வருடத்திற்குப் பின் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்களின் அடிப்படையில்தான் நாம் பிரிட்டனின் யுத்த பிற்கால பொருளாதார நிலையை முடிவு செய்யவேண்டும். ஏனெனில் 1947 வருடம் வரை பிரிட்டன் ராணுவ படை கலைப்பிலும், தொழிற்சாலைகளை யுத்தகால வேலையிலிருந்து சமாதான கால வேலைக்குத் திருப்புவதிலும் ஈடுபட்டிருந்தது. அதுமுதல் பிரிட்டன் பல சாஸ்வதமான பிரச்னைகளுக்கு பரிகாரம் காணுவதிலும், உலக வர்த்தகத்தில் தனது பழைய ஸ்தானத்தை மீண்டும் ஏற்படுத்திக்கொள்வதிலும் ஈடுபட்டு வந்திருக்கிறது. இவ்வளவு கஷ்டங்கள் இருந்தபோதிலும் பிரிட்டனின் 1947 வருட பொருளாதார நிலை ஒப்பிடக்கூடிய அளவிற்கு நன்றாகவே இருந்துள்ளதென்பதும் தெரியவந்துள்ளது.

## பிரதான அலுவல்

வெளிநாட்டு வர்த்தகத்தில் தனக்கு பாதகமாக இருந்து வரும் பாக்கித் தொகையை சரிகட்ட வேண்டுமென்பதுதான் 1947 வருட முதல் பிரிட்டனின் பிரதான அலுவலாக இருந்துவந்துள்ளது. இதில் பிரிட்டன் வெற்றியும் பெற்று வருகிறது. 1947 வருடம் 60 கோடி பவுனாக இருந்த பாக்கித் தொகை 1948 வருடம் 15-கோடி பவுனாகவும், 1949 வருடம் ஏழு கோடி பவுனாகவும் குறைக்கப்பட்டுள்ளது.

கடந்த வருடம் பாதகமாக துண்டு விழுந்துள்ள இங்க ஏழு கோடி பவுனை இவ்வருடம் 5-கோடி பவுன் உபரியாகச்செய்துவிட வேண்டுமென்ற லட்சியத்துடன்தான் பிரிட்டிஷ் அரசாங்கம் தனது இவ்வருட பட்ஜெட் கொள்கையை உருவாக்கியுள்ளது.

மேற்படி பாதகமான வர்த்தக பாக்கியை சரிகட்ட பிரிட்டன் கடந்த மூன்று வருடங்களாக தனது இறக்குமதி அளவை கூடுமான வரையில் குறைத்துக் கொண்டு அதே சமயத்தில் தனது ஏற்றுமதிகளின் அளவை தொடர்ச்சியாக அதிகரித்துவருகிறது. தற்போது பிரிட்டன் யுத்த முற்கால அளவில் 10 சதவிகிதம் குறைவாகவே இறக்குமதி செய்துவருகிறது; யுத்த முற்கால அளவை விட 50 சதவிகிதம் அதிகமாகவே ஏற்றுமதி செய்துவருகிறது.

அதிகப்படியான அளவு சரக்குகளை ஏற்றுமதி செய்ய வேண்டுமென்ற இலட்சியத்தை எய்துவதற்காக பிரிட்டன் உள்நாட்டில் சரக்குகளின் விலைவாசிகளையும், தொழிலாளர்களின் கூலிகளையும் ஸ்திரப்படுத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டது. யுத்தத்திற்குப்பின் அநேக நாடுகளில் பொதுவாக ஏற்பட்டுள்ளதைப் போன்ற பண வீக்கப் பிரச்னையுடனும் பிரிட்டிஷ் சர்க்கார் போராடவேண்டியிருந்தது. இப் பண வீக்க போராட்டத்தில பிரிட்டன் பெற்றுவரும் வெற்றி காரணமாகத்தான் இன்று தனது ஏற்றுமதி லட்சியத்திலும் முன்னேற முடிந்துள்ளது.

கூலிகள், சம்பளம், லாபம், பங்கு லாபம் மூலம் கிடைக்கும் சொந்த வருமானத்தை அதிகரிக்கவிடாமல் ஸ்திரப்படுத்துவதற்கான தனது கொள்கையை பிரிட்டிஷ் சர்க்கார் சுமார் இரண்டு வருடங்களுக்கு முன்னர்தான் வெளியிட்டது. கூலிகள் உயர்வதை பூரணமாக தடைசெய்துவிட வேண்டுமென்ற விருப்பம் அரசாங்கத்திற்கு இருக்கவில்லை என்பதும் இங்கு கவனிக்கத்தக்கதாகும். 1947 வருடம் பிரிட்டிஷ் கூலி 100 என்று வைத்துக்கொண்டால் இது 1948 வருடம் 108 ஆகவும், 1947 வருடம் 110 ஆகவும் அதிகரித்துள்ளது. உள்நாட்டில் சரக்குகளின் விலைவாசியும் 1947 வருடத்திற்குப் பின் 13 சதவிகிதமே உயர்ந்துள்ளன. பெரும்பான்மையான தொழிலாளர்கள் அதிக நேர வேலைமூலம் அதிக கூலி சம்பாதித்து வருவதில் வாழ்க்கைச் செலவில் ஏற்பட்டுள்ள உயர்வை ஈடுசெய்துகொள்ள முடிந்துள்ளது.

கிட்டத்தட்ட ஸ்திரமான கூலிகள், ஸ்திரமான விலைவாசிகள் என்ற இப்பின்னணிக்குப் பின் உற்பத்தியாலும் அதிகப்படியான உயர்வு ஏற்பட்டுள்ளது. விவசாயப் பண்ணைகளி

(12-ம் பக்கம் பார்க்க)

## கொடுபடாத வெளிநாட்டுத் தபால் பார்சல்களைப் பத்திரப்படுத்தி வைக்கக் கட்டணம்

வெளிநாடுகளிலிருந்து இங்கு வரும் தபால் பார்சல்கள் பெற்றுக்கொள்ளாமல் விட்டுவைக்கப்படும் விஷயத்தில் அவைகளைப் பத்திரமாக வைத்து வருவதற்கான (வெயர் ஹௌஸிங்) கட்டணத்தை நாளொன்றுக்கு 4 அணுவாக இருந்ததை 1950 மே 1உ முதற்கொண்டு 5 அணுவாக ஆக்க முடிவு செய்யப்பட்டிருக்கிறது; ஆனல் இக்கட்டணம் ஒரு பார்சல் விஷயத்தில் உச்சபட்சமாக 7—13—0 ரூபாய்க்கு மேற்பட்டு ஆகிவிடக்கூடாது. ரூபாயின் நாணய மதிப்புக் குறைக்கப்பட்டுவிட்டதால், சர்வதேச நியதிகளில் குறிப்பிடப்பட்டுள்ள உச்ச வரம்பான 5 தங்க பிரான்குகளுக்குச் சரியான தொகை ஏற்படும்பொருட்டு இம்மாறுதல் செய்யப்பட்டிருக்கிறது.

# ஹரிஜனங்களுக்கு நில அடமானம்

## நிர்வாக விசித்திரம்

(ஊட்டத்தூர் ஏ. ஆர். ராஜன் எழுதுவது)

இந்தியநாடு பிரிட்டிஷ் முடியின் கீழ் இருந்த காலத்தில் ஏனைய நாட்டைவிட மிகவும் பிற்போக்கான நாடாக விளங்கினது என்பது உலகம் அறிந்த உண்மை. நாம் சுதந்திரம் அடைந்துவிட்டோம். நிர்வாகத்தை நடத்தும் நமது தேசிய சர்க்கார் மக்களின் முற்போக்கான நிலைக்காக பல திட்டங்கள் வகுத்து அதை பத்து வருட காலத்தில் நிறைவேற்ற வேண்டு மென்றும் தங்கள் அறிக்கையின் மூலம் சொல்லுகிறர்கள்: இந்நாட்டில் வசிக்கும் மிகவும் பிற்போக்கானவரும் கீழ்ஜாதி என்று ஒதுக்கப்பட்டவருமான ஹரிஜனங்களின் வாழ்வை உயர்த்த சர்க்கார் எவ்வித உதவியும் செய்ய தயாராக இருக்கிறது என்று பல பத்திரிக்கைகளிலும், மேடைகளிலும் நமது அரசாங்க மந்திரிமார்கள் பேசி வருகிறர்கள். போதுமான உணவும், உடுத்த உடையும், குடியிருக்க நல்ல வீடும் இல்லாத ஒரு குறிப்பிட்ட சமூகம் நமது நாட்டில் எது என்றல் ஏழை ஹரிஜனங்கள் தான் என்பதில் சந்தேகமில்லை. இம் மக்களின் நிலையை உயர்த்த காந்தியடிகள் செய்த தொண்டு கணக்கிலடங்காது. மகாத்மாவின் அடிச்சுவற்றை பின்பற்றி பல ஊழியர்கள் பல வருஷங்களாக தொண்டாற்றி வருகிறர்கள். மகாத்மாவின் லக்ஷயத்தை பூர்த்தி செய்யவும் ஹரிஜனங்களின் நிலையை உயர்த்தவும் என்னலானதை கடந்த ஆறுவருஷங்களாக செய்து வருகிறேன். ஆனல் நிர்வாகத்திலிருக்கும் சர்க்கார் அதிகாரிகளின் கருணை என் ஊக்கத்தை தளர்த்துகிறது என்றலும் என் மூச்சு உள்ள வரையில் கீழ் வகுப்பார் என்று ஒதுக்கப்பட்டவரின் முற்போக்கு நிலைக்காக உழைப்பது என்று சங்கல்ப்பம் செய்து கொண்டுள்ளேன். எங்கள் கிராமத்தில் உள்ள ஹரிஜனங்களை எடுத்துக்கொள்வோம் இவர்கள் அன்றடி விவசாய கூலிகள், மிராஸ்தார்களின் பண்ணை வேலையை செய்து வருகிறர்கள். விவசாயம் செய்வதில் மிகுந்த அனுபோகம் உள்ளவர்கள்! ஆனல் இவர்களுக்கென்று சொந்த நிலம் கிடையாது. இதை உத்தேசித்து எங்கள் கிராமத்தில் இருக்கும் நெடுங்கூர் ரிவின்யூ ரிசர்வ் பாராஸ்டில் சுமார் 301 ஏக்கர் புன்செய் தரிசு நிலம் இருப்பதில் லாலுகுடி சிவஞானவிவசாய சொஸைட்டிக்கு 145 ஏக்கர் நிலங்கள் சாகுபடிக்காக தற்காலிக அடமானம் செய்து கொடுத்திருக்கிறர்கள். இதை உத்தேசித்து 156 ஏக்கர் நிலங்களில் 100 ஏக்கர் நிலங்களை 40 ஹரிஜன குடும்பங்களுக்கு விவசாயம் செய்வதற்காக தற்காலிக அடமானம் செய்து கொடுக்க வேண்டுமென்று லால்குடி தாசில்தார் அவர்களுக்கு 23—6—49 மனு செய்து கொண்டேன் பதிலில்லை. பிறகு உயர்ந்த அதிகாரிகளுக்கும் மனுச் செய்தேன். நானே லாலுகுடி சென்று பலமுறை தாசில்தாரிடம் நிலம் கொடுக்கப்பட வேண்டுமென்பதை வற்புறுத்தி சொன்னதின் பேரில் தாசில்தார் இவ்விடம் நேரில் வந்து 40 ஹரிஜன குடும்பங்களுக்கும் தலா இரண்டு ஏக்கர் பாரஸ்டில் சாகுபடி செய்து கொள்ளும்படியும் கிராம கர்ணம் மூலம் தீர்வையை நிர்ணயிப்பதாகவும் தெரிவித்ததின் பேரில் ஷை ஜனங்கள் பாரஸ்டை விவசாயத்திற்கு லாயக்காக சீர்திருத்தி வருகிறர்கள். இப்பால் தாசில்தார் அவர்கள் 1—4—50ம் தேதி முதல் ஷைபாரஸ்டை பாரஸ்ட் இலாகாவிடம் ஒப்புவிக்கப் பட்டதாகவும் தனக்கு சம்பந்தமில்லையென்றும் சொல்லிவிட்டார். தற்பொழுது ஷை நில சம்பந்தமாக பாராஸ்டு இலாகாவிடமும் சம்பந்தபட்ட எல்லா சர்க்கார் உயர்தர அதிகாரிகளுக்கும் மனுசெய்து கொண்டுள்ளேன். இன்னும் பலன் கிடைக்கவில்லை. தாசில்தார் அவர்கள் வார்த்தையை நம்பி கடும் வெயிலிலும் முள்ளிலும், கல்லிலும் கஷ்டப்பட்டு பாரஸ்டை விவசாயம் செய்வதற்கான சீர்திருத்தம் செய்து வரும்போது இம்மாதிரி தாசில்தார் சொல்லி விட்டார்கள். இந்நிலையில் நிர்வாகம் நடந்து வருகிறது. ஹரிஜனங்களின் குறைகளை உடனடியாக கவனித்து ஆவன செய்ய அதிகாரிகள் முன் வரும் காலம் என்று வருமோ தெரியவில்லை!.

# பகிரங்கக் கடிதம்!

—(பரதேசி)—

கோரக்பூர், உதவி செஷன்ஸ் ஜட்ஜ் அவர்கள் சமூகத்துக்குத் தென்னிந்திய இளைஞர் கழகக் காரியதரிசி 'கண்ணாயிரம்' எழுதுவது!...

அன்புடையீர்! வணக்கம்!...

தாங்கள் 'பெண்களைக் கடத்திச் சென்றதாக' என்ற வழக்கில் இளம் பெண்கள் சினிமாப் பார்ப்பது தவறென்றும் காதல் கட்டங்கள் நிறைந்த இந்தியப் படங்களைப் பார்ப்பதால் அவர்களது உணர்ச்சி கட்டுக்கடங்காமற் போய்விடுகிறதென்றும் திருவாய் மலர்ந்திருக்கிறீர்கள்!

அது சரியா தவறா என்பது ஒரு புறமிருக்கட்டும்!... இளம் பெண்கள் சினிமாப் பார்க்கக்கூடாது என்பது மூலம் மறைமுகமாக இளைஞராகிய எங்களையும் பார்க்கக் கூடாதென்று சொல்லுகிறீர்கள்!...அதாவது இளம் பெண்கள் தங்கள் திருவாக்கைக் கேட்டுக்கொண்டு ஒரேயடியாக தியேட்டர்களையும், பொது மேடைகளையும், கலையரங்குகளையும் பகிஷ்கரித்துவிட்டால் அங்கு எங்களுக்கெல்லாம் என்னவேலை?

எங்களைவிடக் குறைந்த கட்டணத்தில் தியேட்டர்காரர்கள் அவர்களை எங்கள் ஸீட்டுக்குப் பின்புறம் அனுமதிக்கும் வழக்கம் ஏன்?...

"ஆருயிரே!... நான் அக்கறைச் சீமையிலிருந்து உனக்கு டெலிபோன் செய்கிறேன்!...உன் நினைவு என்னைத் துளைத்தெடுக்கிறது!....." என்பது போன்ற அர்த்த புஷ்டியுள்ள ஹிந்திப் பாடல்களை அந்த மெல்லியலார்கள் இழைந்த குரலில் இனிமையாகப் பாடுவதேன்?...

இதையெல்லாம் சிறிதும் யோசிக்காமல் மனம் போனபடி என்னென்னவெல்லாமோ சொல்லுகிறீர்களே! ...இனிமேலாவது இதுபோன்ற—எங்கள் உரிமையைப் பறிக்கும் விஷயங்களில் அபிப்பிராயம் தெரிவிக்காமலிருக்கும்படி ஏனைய நண்பர்களின் சார்பாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்!.

நலம் வாழ்க!

இப்படிக்கு,
தங்கள்

அன்புள்ள எஸ். கண்ணாயிரம்,
காரியதரிசி, இளைஞர் கழகம்.

மேற்படி ஜட்ஜ் அவர்களுக்கு சினிமா தியேட்டர்களினுள் 'கூல் ட்ரிங்' விற்பனை செய்யும் 'ஜில்ஜில் நாயகன்' எழுதுவது!...

மேன்மை தங்கிய ஜட்ஜ் அவர்களே!... தங்கள் அபிப்பிராயம் அடியோங்களுடைய தலையில் பேரிடி விழுந்தாற்போலிருக்கிறதே!...

மேல் வகுப்புக்களில், சென்ட் மணங்கமழ, சில்க் சேலை சலசலக்க, புன்னகை மாறா முகங்களிலிருந்து பொன் மொழிகள் உதிர,.... இப்படியெல்லாம் 'ரம்பையோ, ஊர்வசியோ!... திலோத்தமைதானோ!...... இல்லை நம் மாஜி நடிகை மதனாங்கியோ' என்றெல்லாம் சந்தேகத்தைக் கிளப்பி எங்களுள்ளத்தில் துளியிடம் கூடப் பாக்கியில்லாமல் ஆக்ரமித்து வரும் இளம் பெண்களை "சினிமாப் பார்க்காதே!" என்கிறீர்களே!

இது முறையா?... தகுமா?... தருமந்தானா?...

கிடைத்த உத்தியோகங்களையெல்லாம் காற்றில் பறக்க விட்டுவிட்டு இந்த சேவையை விடாப் பிடியாக நடத்திவரும் எங்கள் கதி என்னாவது!...

எனவே சிறிது சிந்தியுங்கள், தங்கள் அபிப்பிராயத்தை புனராலோசனை செய்யுங்கள்!...

இப்படிக்குத்
தங்கள்
அன்பு மறவாத
—ஜில் ஜில் நாயகன்.

அதே ஜட்ஜ் அவர்களுக்கு ஒரு 'இளம் பெண்' எழுதுவது!...

மேதை மிக்க மூதியவரே!...

வணக்கம்!... எங்களைப்பற்றித் தாங்கள் வெளியிட்ட அபிப்பிராயத்துக்கு நன்றி. ஆனால், "இளம் பெண்" என்றால் யார்?...

நான்கு வயதுக் குழந்தையா?... ஐந்து வயது நடன ராணியா?...... இரண்டுங் கெட்டானான குமாரியா? ...கல்யாணமார்க்கெட்டில் விற்பனைக்குத் தயாரான யுவதியா?... யாரைத் தாங்கள் இளம் பெண் என்று குறிப்பிடுகிறீர்கள்?

பொதுவாக "இளம் பெண்" என்றால் பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழும் பாட்டி கூடத் தான் தன்னை 'இளம் பெண்' என்று நினைத்துக்கொண்டிருக்கிறாள்! அவளுக்கும் தடை விதிக்கிறீர்களா?...

மேலும் தங்கள் கூற்று விசித்திரமாயிருக்கிறது!... காதல் கட்டங்கள் நிறைந்த படங்களைப் 'பார்ப்பது' கூடாதென்கிறீர்கள்!... இளம் பெண்கள் அந்தமாதிரிப் படங்களில் 'நடிப்பது' மட்டும் கூடுமோ?...

நடிப்பது தவறில்லை என்னும் போது பார்ப்பதுமட்டும் எப்படித் தவறாகும்?... மேலும், ஒரு பெண் ஒருவனோடு ஓடிவிட்டாள் என்னும் போது ஒருவன் ஒரு பெண்ணோடு ஓடி விட்டான் என்பது ஊர்ஜிதமாகிறதல்லவா?...

ஆணுக்கொரு நீதி?... பெண்ணுக்கொரு நீதியா?... இளைஞர்கள் இனி சினிமாப் படம் பார்க்கக்கூடாதென்று தான் சொல்லுங்களேன்!

மொத்தத்தில் தங்கள் அபிப்பிராயம் ஒருதலைப் பட்சமானது என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்!

இப்படிக்கு,
ஒரு 'இளம் பெண்'



## ஞானோதயம்

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

அசோகன் :— (சாந்தமாக)...எப்போதும் பலன் ஒன்றேயாகும்!... சத்தியமே முடிவில் வெற்றியடையும்.

சந்திர :— சத்தியம் என்றோ வெற்றி பெறப் போகிறதாம்! அதற்குள் நடக்கப்போகிற,.....

அசோகன் :— என்ன நடந்தாலும், எவ்வளவு யுகங்கள் கடந்தாலும் எனக்குக்கவலையில்லை. சத்தியத்தின் வெற்றிக்கு முன்பு சாவையும் நான் பொருட் படுத்தவில்லை.

(சந்திர சேனன் அசோகனுடன் புறப்படுகிறான். அசோகனைத் தழுவிக்கொண்டு முரளி கண்ணீர் விடுகிறான்)...

அசோகன் :— (சற்று நின்று)...கண்ணீர் விடவா என்னிடம் நீ கற்றுக்கொண்டாய்? என்னுடைய கலை எனக்கு என்ன உத்தரவு கொடுத்ததோ, அதையே நான் செய்கிறேன். நிர்மாண சக்தி கொண்ட கலைஞன் கடவுளின் பிரதிநிதியா அல்லது நாசக்கார அரசன் கடவுளின் பிரதிநிதியா என்பதை நான் கடவுளிடமிருந்தே தெரிந்துகொள்ள விரும்புகிறேன்! நீயும் பாடிக்கொண்டே அடிமைப் படுத்துவோரை எதிர்த்து நில்!...

விமலன் :— (நடந்துகொண்டே) கடவுளை நேரில் கண்டவன் போலப் பேசுகிறானே!

(போகிறார்கள்)

முரளி :— (தனக்குள்)... மக்கள் வடிவிலிருக்கும் கடவுள் தான் இந்தப் பேய்களின் மண்டையில் அடிக்க வேண்டும்!...

(தொடரும்)

## ·பொருளாதார நிலைமை

(9-ம் பக்கத் தொடர்ச்சி)

லும், தொழிற்சாலைகளிலும் உற்பத்தி 1938 வருடத்திலிருந்ததைவிட மூன்றில் ஒரு பங்கு அதிகமாகும். 1946 வருட உற்பத்தியை 100 என்று வைத்துக் கொண்டால் இவ்வருட ஆரம்பத்தில் இது 140ஆக அதிகரித்துள்ளது. கைத்தொழில்களில் பிரதி வருடமும் தனித் தொழிலாளியின் உற்பத்தி சக்தி அதிகரித்து வருவதுதான் உற்பத்தியில் ஏற்பட்டுவரும் உயர்வுக்கு முக்கிய காரணமாகும்.

ஸ்திரமான கூலிகள், விலைவாசிகள் என்ற அடிப்படையில் உற்பத்தி பெருகி வருவதுதான் பிரிட்டனின் சமபல வர்க்கத்திற்கு அஸ்திவாரமாக விளங்கி வருகிறது. இருந்தபோதிலும் பிரிட்டனுக்கு இன்னமும் ஒரு பிரச்னை காத்துக்கொண்டிருக்கிறது. அதுதான் டாலர் பற்றுக் குறை. பிரிட்டனுக்கு மட்டுமல்லாது ஸ்டர்லிங் பிரதேசம் முழுவதற்குமே அதிக கஷ்டத்தைக் கொடுத்து வரும் இந்த டாலர் பற்றுக்குறை பிரச்னை பெரும் பிரச்னைதான் இருந்த போதிலும் ஸ்டர்லிங் செலாவணி மதிப்பு குறைக்கப்பட்ட பின்னர் இத்துறையிலும் சிறிது அபிவிருத்தி ஏற்பட்டு வருகிறது. 1952 வருடத்திற்குப் பின் டாலர் உதவியின்றி சொந்த பலத்தில் நிற்க வேண்டுமென்பது மிகக்கஷ்டமான இலட்சியம்தான் என்றாலும் பிரிட்டன் இதுவரை அடைந்துள்ள முன்னேற்றத்தைக் கவனிக்குமிடத்து வருங்கால வெற்றியும் சாத்தியமே என்ற நம்பிக்கை ஏற்படுகிறது.

—ஜான் கிங்ஸ்லி.

# காலனிகளில் உயர்தரக் கல்வி

மேற்கிந்தியத்தீவுகளில் புதிதாக அமைக்கப்பட்டுள்ள யுனிவர்ஸிடி கல்லூரிக்கு மா. த. அலிஸ் இளவரசி அத்தியட்சகராக நியமனம் செய்யப்பட்டுள்ளது காலனிகளின் உயர்தரக் கல்வி சரித்திரத்திலேயே ஒரு முக்கிய சம்பவமாகும். காலனிகளில் உயர்தரக்கல்வி அளிப்பதற்கான விஷயங்களை கண்டறிவதற்காக 1945 வருடம் அமைக்கப்பட்ட மேற்கிந்தியத் தீவுகள் கமிட்டியின் அறிக்கையைத் தொடர்ந்தே இக் கல்லூரி ஸ்தாபிக்கப்பட்டுள்ளது.

1948 வருட அக்டோபர் மாதம் தான் இக்கல்லூரியில் வைத்திய பிரிவு வேலை செய்ய ஆரம்பித்தது; 1949 வருடஆரம்பத்தில் விஞ்ஞான பிரிவு தொடங்கப்பட்டது; இவ் வருடம் அக்டோபர் மாத வாக்கில் கலைப்பிரிவு ஆரம்பமாகும். இறுதியாக இக்கல்லூரியில் 2000 மாணவர்கள் பயிலக்கூடுமென தற்போது நம்பப்படுகிறது. ஆரம்பத்தில் இக் கல்லூரி லண்டன் பல்கலைக் கழக பட்டம் பெறுவதற்கான பரிட்சைக்குத்தான் மாணவர்களை பயிற்றுவிக்கும் என்றாலும் இதை சுதந்திர பல்கலைக் கழகமாகச் செய்வதே இறுதியான லட்சியமாகும்.

ஜமெய்க்காவின் தலைநகரிலுள்ள மோனு என்ற மலை அடிவாரத்தில் தான் இப்பல்கலைக்கழகத்திற்கென 700 ஏகரா மனை ஒதுக்கப்பட்டுள்ளது. புதுக்கட்டிடங்கள் கட்டி முடிவடைய சிறிது நாட்கள் பிடிக்குமாதலால் தாற்காலிகமாக அங்குள்ள படை முகாம் கட்டிடங்கள் உபயோகிக்கப்பட்டுவருகின்றன. புது கட்டிடங்களுக்காக செலவழிக்கப்படவிருக்கும் மூன்று கோடி ரூபாயில் பெரும் பகுதியை பிரிட்டனின் காலனி அபிவிருத்தி இலாகா தான் கொடுத்துதவப்போகிறது.

சர்வகலாசாலை வாசகசாலை.

சர்வகலாசாலைக் கட்டிடம்.

மேற்கிந்தியத் தீவுகள் சர்வகலாசாலையில் ரசாயன ஆராய்ச்சி சாலை.

மேற்கிந்தியத் தீவுகள் சர்வகலாசாலையின் முதல் அத்யக்ஷகர் இளவரசி ஆலிஸ்.



Edited, Printed and Published by Thiruloka-Sitharam, at the Hanuman Press, Samaspiran Street, Tiruchirapalli,